# ஸ்ரீ வேங்கடேஸ்வர ஸ்வாமி கோயில், திருமலை.

## தினசரிபூசைகள், தர்மதரிசனங்கள் பற்றிய கால அட்டவணை

1-3-79 முதற்கொண்டு திருமலை ஸ்ரீ வேங்கடேஸ்வர சுவாமி கோயிலின நிகழ்ச்சி நிரல்கள் கீழ்வருமாறு மாற்றஞ் செய்யப்பட்டுள்ளன.

சனி, ஞாயிறு, திங்கள், செவ்வாய்க் கிழமைகளில்;

காலை

3-00 முதல் 3-30 வரை : சுப்ரபாதம்
3-30 முதல் 3-45 வரை : சுத்தி
3-45 முதல் 4-30 வரை : தோமாலா சேவை
4-30 முதல் 4-45 வரை : பங்காரு வாயிலில் கொலுவு, பஞ்சாங்க ஸ்ரவணம்.
4-45 முதல் 5-30 வரை : முதல் அர்ச்சனை. அதாவது ஸகஸ்ரநாம அர்ச்சனை (தனி)
5-30 முதல் 6-00 வரை : முதல் மணி, பலி, சாத்துமுறை.
6-00 முதல் மதியம் 12-00 வரை : ஸர்வ தரிசனம்
மதியம் 12-00 முதல் 1-00 வரை : சுத்தி, இரண்டாவது அர்ச்சனை (ஏகாந்தம்) இரண்டாவது மணி.

மாலை

1-00 முதல் இரவு 8-00 வரை : ஸர்வ தரிசனம்
இரவு 8-00 முதல் 9-00 வரை : சுத்தி, இரவு கைங்கர்யம் (ஏகாந்தம்)
9-00 முதல் நள்ளிரவு 12-00 வரை : ஸர்வ தரிசனம்
நள்ளிரவு 12-00 முதல் காலை 12-30 வரை : சுத்தி, ஏகாந்த சேவைக்கான ஏற்பாடுகள்.
காலை 12-30க்கு: ஏகாந்த சேவை (தனி.)

புதன் கிழமைகளில (சஹஸ்ர கலசாபிஷேகம் நடைபெறுவதால்)

காலை

3-00 முதல் 3-30 வரை : சுப்ரபாதம்
3-30 முதல் 3-45 வரை : சுத்தி
3-45 முதல் 4-30 வரை : தோமாலா சேவை (தனி.)
4-30 முதல் 4-45 வரை : பங்காரு வாயிலில் கொலுவு, பஞ்சாக ஸ்ரவணம்.
4-45 முதல் 5-30 வரை : முதல் அர்ச்சனை, (சகஸ்ர நாம அர்ச்சனை) (தனி)
5-30 முதல் 6-00 வரை : முதல் மணி, பலி, சாத்துமுறை, சேவைக்கான ஏற்பாடுகளை மேற்கொளல் முதலியன.
6-00 முதல் 8-00 வரை ; ஆர்ஜித ஸகஸ்ர கலஸாபிஷேகம், சுத்தி, இரண்டாவது அர்ச்சனை (ஏகாந்தம்) மணி.
8-00 முதல் இரவு 8-00 வரை : ஸர்வ தரிசனம்
இரவு 8-00 முதல் 9-00 வரை : சுத்தி, இரவு கைங்கர்யம் (ஏகாந்தம்)
9-00 முதல் நள்ளிரவு 12-00 வரை : ஸர்வ தரிசனம்
நள்ளிரவு 12-00 முதல் காலை 12-30 வரை: சுத்தி, ஏகாந்த சேவைக்கான ஏற்பாடுகள்.
காலை 12-30க்கு: ஏகாந்த சேவை. (தனி.)

வியாழககிழமைகளில் (திருப்பாவாடா உத்ஸவம் நடைபெறுவதால)

காலை

3-00 முதல் 3-30 வரை: சுப்ரபாதம்
3-30 முதல் 3-45 வரை: சுத்தி
3-45 முதல் 4-30 வரை: தோமாலா சேவை (தனி.)
4-30 முதல் 4-45 வரை: பங்காரு வாயிலில் கொலுவு, பஞ்சாக ஸ்ரவணம்.
4-45 முதல் 5-30 வரை: முதல் அர்ச்சனை; சகஸ்ர நாம அர்ச்சனை (தனி)
5-30 முதல் 6-00 வரை: முதல் மணி, பலி, சாத்துமுறை.
6-00 முதல் 8-00 வரை: சாலிம்பு, 2-வது அர்ச்சனை (ஏகாந்தம்) திருப்பாவாடை அலங்காரம், மணி முதலியன.
8-00 முதல் இரவு 8-00 வரை: ஸர்வ தரிசனம்
இரவு 8-00 முதல் இரவு 10-00 வரை: பெரிய சுத்தி, இரவு கைங்கர்யங்கள், பூலங்கி சமர்ப்பணை, இரவு மணி ஏகாந்தம்.
இரவு 10-00 முதல் நள்ளிரவு 12-00 வரை: பூலங்கி சேவை.
நள்ளிரவு 12-00 முதல் காலை 12-30 வரை: சுத்தி, ஏகாந்த சேவைக்கான ஏற்பாடுகள்.
காலை 12-30 க்கு: ஏகாந்த சேவை (தனி)

வெள்ளிக் கிழமைகளில் (அபிஷேகம் நடைபெறுவதால்)

காலை

3-00 முதல் 3-30 வரை: சுப்ரபாதம்.
3-30 முதல் 5-00 வரை: சாலிம்பு, சுத்தி, நித்ய கட்டளை கைங்கர்யங்கள், அபிஷேகத்திற்கான ஏற்பாடுகள்.
5-00 முதல் 7-00 வரை: அபிஷேகம்.
7-00 முதல் 8-30 வரை: ஸமர்ப்பணை முதலியன.
8-30 முதல் 9-30 வரை: தோமாலா சேவை, அர்ச்சனை (தனி.)
9-30 முதல் 10-00 வரை: 2வது மணி, பலி, சாத்துமுறை.
10-00 முதல் இரவு 8-00 வரை: ஸர்வ தரிசனம்
இரவு 8-00 முதல் இரவு 9-00 வரை: சுத்தி, இரவு கைங்கர்யங்கள்.
இரவு 9-00 முதல் நள்ளிரவு 12-00 வரை : ஸர்வ தரிசனம்
நள்ளிரவு 12-00 முதல் காலை 12-30 வரை; சுத்தி, ஏகாந்த சேவைக்கான ஏற்பாடுகள்.
காலை 12-30க்கு: ஏகாந்த சேவை (தனி)

குறிப்பு : சுப்ரபாதத்திற்கு ரூ. 25/- சிறப்பு தரிசன டிக்கெட்டுகள் வாங்கிய நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர். அர்ச்சனை, தோமாலா சேவை, அபிஷேகம் ஆகியவற்றிற்கு ரூ. 25/- சிறப்பு தரிசன டிக்கெட்டுகள் அனுமதிக்கப்படமாட்டாது. ரூ. 4/-க்கு விற்கப்படும் சேவானந்தர டிக்கெட்டு வசதிகள் தற்போது நிறுத்தப்பட்டுள்ளன.



மலஸீ ஜுடரோ மகஸிம்ஹமு
அலவி மீறின மாயல ஸிம்ஹமு (பல்லவி)

அதிவோ ஜுடரோ ஆதிம புருஷுனி
பெத யௌபளமுமீதி பெனு ஸிம்ஹமு
வெதகி பிரம்மாதுலு வேதாந்த ததுலு
கதிஸி கானக லேனி கன ஸிம்ஹமு (மலஸீ)

மெச்சி மெச்சி ஜுடரோ மிதிமீறினட்டி
சிச்சு கண்டிதோடி ஜிகி ஸிம்ஹமு
தச்சின வாரிதிலோன தருணி கௌகிட சேர்ச்சி
நச்சின கோள்ள ஸ்ரீ நரஸிம்ஹமு (மலஸீ)

பிங்கமுன ஜுடரோ பிறிதியக நேடு
அங்கபு தனுஜ சம்ஹார ஸிம்ஹமு
வேங்கடனகமுபை வேதாசலமுபை
கிங்க லேக வடிபெறிகின ஸிம்ஹமு (மலஸீ)

*[அன்னமாச்சார்யா ஆத்யாத்மிக சங்கீர்த்தனைகள்–13 Vol. V ]*

*[புருஷாகாரத்துடன் கூடிய சிங்கம் அங்கிங்கெனுதபடி எங்கும் உலவி வருகின்றது; கட்டுத்திட்டங்களுக்கு மீறிய மாயங்கள் பல புரியும் சிங்கம் இது.*

*பெரிய அஹோபிலத்தில் வீற்றிருக்கும் அவ் ஆதி புருஷனை பாருங்கள்; பிரம்மா, முதலிய தேவக் கூட்டத்தினராலும் வேதாந்தங்களாலும் தேடி தேடிப் பார்த்தும் காணக் கிடைக்கா சிங்கம் அது.*

*இவ்வளவுதான் என்று கருதி விடும்படி இல்லாது அக்னி நேத்திரத்தோடு ஒளிர்விடும் இச் சிங்கத்தை மகிழ்ச்சியுடனும் பக்தியுடனும் காணுங்கள்; கடலில் பிறந்த லக்ஷ்மிதேவியை அணைத்துக் கொண்டு, கூரிய நகங்களுடன் விளங்கும் இந்நரஸிம்மனைப் பாருங்கள்.*

*மடிமீது கிடக்கின்ற இரணியகசிபுவை கொல்லுகின்ற சிங்கத்தை அஞ்சாமல் நிமிர்ந்து நோக்குங்கள்; வேங்கடத்திலும் வேதாசலத்திலும் எந்தவித இடையூறுமின்றி உலவிவரும் இச் சிங்கத்தைப் பாருங்கள்.]*




# ஸப்தகிரி

மே 1979

மலர்: 9 இதழ் 12

தனிப்பிரதி 50 காசு.
வருடச் சந்தா ரூ. 6



சிறப்பாசிரியர்:
திரு. பி. வி. ஆர். கே. பிரஸாத், I.A.S.,
செயலாட்சித்தலைவர்,
தி. தி. தேவஸ்தானம், திருப்பதி.

ஆசிரியர்:
திரு. கே. சுப்பாராவ், எம். ஏ.
தி. தி. தேவஸ்தானம்,
திருப்பதி.

அச்சிடுபவர்:
திரு. எம். விஜயகுமார் ரெட்டி,
மேலாளர்,
தி. தி. தேவஸ்தான அச்சகம்,
திருப்பதி.

முழு விவரங்களுக்கு,
Marketing Officer,
Publication Section,
T. T. D. Press Compound,
TIRUPATI-517501.

## உள்ளுறை



அட்டைப் படம்: ஸ்ரீ அன்னமாச்சார்யா கீர்த்தனைக்கு திரு. பாபு வரைந்த சித்திரம்.

# ஆசிரியர் உரை

உண்ணும் உணவிலும் உடுக்கும் உடையிலும் மாறுதலகளைக் காண விரும்பும் மானிட வாழ்க்கையிலும், காற்றையும், கடும் வெய்யிலையும், கனத்த மழையினையும் தவறாது தருகின்ற பருவங்களிலும், மற்றும் மனித அறிவுக்கு அவ்வப்போது வியப்பைத் தருகின்ற இயற்கை அரங்கிலும் வாய்விட்டு விளக்க முடியாத, கவர்ச்சியான ஏதோ சில மாற்றங்கள் அவ்வப்போது நடை பெற்றுக்கொண்டுதான் வருகின்றன. ஆனால் காலச் சக்கரத்தினால் நிகழும் இம்மாற்றங்கள் ஓசையின்றி அவற்றிற் புகுந்து நற்பயன்களை விளைவித்து இன்பத்தையும், நியன அளித்து அனுபவமிக்க பாடத்தினையும் வாரி வழங்கவே செய்கின்றன. ஆகவே ஏதோ ஒரு வகையில் ஒவ்வொரு மாற்றமும ஒரு முக்கியத்துவத்தைப் பெறறு விடுகிறது. இம் மாற்றங்களை தடுத்து நிறுத்த முடிவதில்லை.

'ஆம், அதுபோன்ற மாற்றங்கள் பலவற்றிற்கு 'ஸப்தகிரி' கடந்த பல ஆண்டுகளாக உள்ளாகி வந்துள்ளது. 1949-இல் ஆரம்பிக்கப்பட்ட தி. தி. தேவஸ்தான சமய பத்திரிகை, 1970-ல் ஸப்தகிரி என்னும் பெயர் மாற்றத்துடன் வெளி வந்தது. பிறகு 1975-ல் முழுக்க முழுக்க தமிழிலேயே ஸப்தகிரி வெளியிடப்பட்டு, தொடர்ந்து அதன் வடிவிலும் ஒரு மாற்றம் ஏற்பட்டு, அன்று முதல் இன்று வரை தனிப்பொலிவுடன் இந்துசமயத்தின் பெருமையை விளக்கிடும் வகையிலும், தேவஸதானத்தின் நடவடிக்கைகளை அவ்வப்போது தெரிவித்து வாசகர்களுக்கும் யாத்திரிகர்களுக்கும் ஒரு வழிகாட்டியாகவும் இருந்து வருகின்றது.

1972-ல் தி. தி. தேவஸதான நூல் வெளியீட்டுப் பிரிவினை தன்னுடன் இணைத்துக் கொண்டு ஸப்தகிரி வளர்ந்தது. அடுத்து 1976-ல் தேவஸதான மேலாண்மை, பத்திரிகையின விற்பனையைப் பெருக்கிடும் வகையில், ஸப்தகிரி முழு வேகத்துடன் செயறபட வேண்டும் என்ற நோக்கத்தால் தேவஸ்தான சமய வெளியீட்டுப் பிரிவினையும், ஸப்தகிரி விற்பனைப் பிரிவினையும், பத்திரிகையிலிருந்து பிரித்து அவற்றினைமற்றொரு அலுவலர் கீழ் ஒப்படைத்தது. அன்று முதல், ஸப்தகிரியில் வெளியிடப்படும் கட்டுரைகளுக்கும் புகைப்படங்களுக்கும் வழங்கப்பட்டு வந்த சன்மானத் தொகை நிறுத்தப்பட்டிருந்தாலும் ஸப்தகிரியின் விற்பனையில் குறிப்பிடத்தக்க ஒரு மாற்றம் ஏற்படவே செய்தது.

ஆனால் விற்பனைப் பிரிவு ஒரு பத்திரிகையின் வளர்ச்சியில் முக்கிய பங்குவகிப்பதால், ஸப்தகிரி பத்திரிகையின் விற்பனைப் பிரிவு மட்டுமின்றி இளம் சமய எழுத்தாளர்களை ஊக்குவிக்கும் வகையிலும், இந்து சமயம் மற்றும் ஆன்மீகக் கருத்துக்களை எங்கும் பரவச் செய்யும் வகையிலும் சமய நூலகளை குறைந்த விலையில் பிரசுரித்து விநியோகிக்கும் பணியை செவ்வனே ஸப்தகிரி ஆற்றிடும் எனும் மேலாண்மையின் நம்பிக்கைக்கு உறுதியளிக்கும் வகையில் நூல் வெளியீட்டுப் பிரிவும ஸப்தகிரியுடன் தற்போது இணைக்கப்பட்டுள்ளது. வாசகர்கள் தங்கள் ஒத்துழைப்பினை வழங்குவார்கள் என்றே நம்புகிறோம்.

ஸப்தகிரியில் வெளியிடப்படும் கட்டுரைகளுக்கும் புகை படங்களுக்கும் ஒரு குறிப்பிட்ட தொகையினை வழங்க வேண்டும் என்று பல மாதங்களாக மேலாண்மையிடம் எடுத்துக்கூறி தற்போது, புதிய செயலாட்சித் தலைவரின் உதவியால், ஸப்தகிரி தன் முயற்சியில் வெற்றி கண்டுள்ளது. சமய வேறுபாடின்றி இளம் சமய எழுத்தாளர்களை ஊக்குவிக்கும் விதத்தில் விரைவில் அமுலாக்கப்படவுள்ள இச் சன்மானம் வழங்கும் திட்டம், நிச்சயம் ஸப்தகிரியில் ஒரு மாற்றத்தை விளைவிக்கச் செய்யும் என்பதில் சிறிதும் ஐயமில்லை. மேலும் சமய வெளியீட்டுப் பிரிவின் சார்பிலும் சில மாற்றங்கள் புகுத்தப்படவுள்ளன. தேர்ந்தெடுக்கப்படும் சிறந்த சமய நூல்களை வெளியிடும் வகையில் நூலாசிரியருக்கு ரூ. 5000 வழங்குவது, ஏற்கெனவே வெளியிடப்பட்டிருந்தால் அந்நூலின் 50 பிரதிகளை வாங்கிக் கொள்வது போன்ற நற்திட்டங்கள் மேற்கொள்ளப்படவுள்ளன.

பத்திரிகைத் துறையில் மட்டுமின்றி, நாள் தோறும் வேங்கடவனைத் தரிசிக்க ஆயிரக்கணக்கில் திருமலைக்கு வரும் யாத்திரிகர்களின் நன்மைக்காக ஸர்வ தரிசன கால நேரங்களில் ஒரு மாபெரும் மாற்றத்தையும் அண்மையில் தேவஸ்தான மேலாண்மை மேற்கொண்டுள்ளது. பொது மக்களுக்கும் சமய நிறுவனமான தேவஸ்தானத்திற்கும் எப்போதும் ஏதோ ஒரு வகையில் தொடர்பு இருப்பதால் அவர்களுக்கு உதவவும், தேவஸ்தான நிருவாகம் எல்லா வகையிலும் சிறந்து விளங்கிட அதன் எல்லா துறைகளும் ஒரு கட்டிடத்தில் செயற்படவும், யாத்திரிகர்கள் யாவரும் எளிதில் கண்டு கொள்ளும் வகையில் திருப்பதியில் ரூ. 62 இலட்சம் செலவில் அண்மையில் கட்டப்பட்டுள்ள மாபெரும் கட்டிடத்தில் தி. தி. தேவஸ்தான அலுவலகம் தற்போது குடியேறி உள்ளது.

ஆகவே, நூற்றாண்டுகள் பல கடந்தாலும் தனித்தன்மையுடன் என்றும் மாறா புகழுடனும் பெருமையுடனும் விளங்கிடும் அவ்வேங்கடவன் உறையும் திருக்கோயிலைப் பராமரித்து வரும் தி. தி. தேவஸ்தானம், இந்து சமயக் கோட்பாடுகளின் புகழ் பரப்பவும், யாத்திரிகர்களின் நன்மைக்காக பல திட்டங்களை செயற்படுத்தவும் மாற்றங்கள் பலவற்றை மேற்கொண்டுள்ளது. இம்மாற்றங்கள், மேலும் பல ஆக்கப் பூர்வமான மாற்றங்களை மேற்கொள்ள வழி வகுக்கும் என்றே நம்புகிறோம்.

# பொறுப்பாண்மைக் குழு முடிவுகள்

(திருமலையில் 21-3-79 அன்றும், ஹைதராபாத்தில் 8-4-79 அன்றும் நடைபெற்ற குழு கூட்டத்தில் தீர்மானிக்கப்பட்ட சில முக்கிய முடிவுகள் பின்வருமாறு)

திருமலையில் உண்டி மூலமாக கிடைக்கப் பெற்ற ரூ. 20, 140–12–0 பெறுமான ஜார்ஜ் VI ஒரு ரூபாய் நாணயம், அரை ரூபாய், கால் ரூபாய் வெள்ளி நாணயங்களை உருக்கி வெள்ளிக் கட்டிகளாக மாற்ற குழு ஒப்புதல் அளித்துள்ளது. தேவையிருப்பின் இவை பின்னர் ஏலத்தில் விடப்படும்.

யாத்திரிகர்களுக்கென, ஸ்ரீ வேங்கடேஸ்வரர் மற்றும் அவருடைய துணைப் பெண்தெய்வங்களின் திருவுருவங்களைப் பொறித்த 5 கிராம் மற்றும் 10 கிராம் எடையுள்ள தங்கப் பதக்கங்களை விற்பதென்று குழு முடிவு செய்துள்ளது.

திருப்பதியில் வழக்கம்போல் ஒவ்வொரு வருடமும் புகழ்பெற்ற கலைஞர்களைக் கொண்டு இன்னிசைக் கச்சேரி நிகழ்ச்சிகளை நடத்தி வரும் ஸ்ரீ தியாகராஜ விழா குழுவினர்க்கு ரூபாய் 25,000 நன்கொடையாக வழங்க குழு தீர்மானித்துள்ளது.

திருப்பதியிலும், திருமலையிலும் தி. தி. தேவஸ்தான ஸ்ரீ வேங்கடேஸ்வரா ஆர்ஷ ஸம்ஸ்கிருத சதஸ் திட்டத்தின் கீழ் பஜனைகள், ஹரி கதைகள், இன்னிசைக் கச்சேரிகள், சமயச் சொற்பொழிவுகள் ஆகியவற்றை நடத்த, குழு ரூ. 2,00,000/- ஒதுக்கியுள்ளது.

ஸ்ரீ த்ரிதண்டி ராமானுஜ ஜீயர் அவர்கள் வழங்கிய திட்டத்தின்கீழ் ஆந்திர மாநிலத்திலுள்ள ஹரிஜன வாடாக்களில் முப்பது ராம மந்திரங்களைக் கட்டுதற்கு குழு ஒப்புதல் அளித்துள்ளது.

காஞ்சீபுரத்தில் தி. தி. தேவஸ்தானத்தாரின் 10 அறைகளைக் கொண்ட இலவச சத்திரம் ஒன்றினையும், தகவலறிவிப்பு நிலையம் ஒன்றினையும் கட்டுவதென்று குழு தீர்மானித்துள்ளது.

டெல்லியில் தி. தி. தேவஸ்தான குடியிருப்புகளைக் கட்டுதற்கு, ஆந்திரப் பிரதேஷ் விருந்தினர் இல்லத்தில் மனை ஒன்றினை வழங்க வேண்டுமென அரசாங்கத்தைக் கேட்பதென்று குழு முடிவு செய்துள்ளது.

தி. தி. தேவஸ்தானத்திடம் உள்ள சுத்தத் தங்கத்தினை உருக்கி தங்கப் பதக்கங்களாக மாற்றி அவற்றினை பக்தர்களுக்கு விற்றுவிடுவதென்று குழு தீர்மானித்துள்ளது.

திருமலையில் இரண்டு மலை வழிச் சாலைகள் (பேருந்துசாலை) கூடும் இடத்தில் கலை நுணுக்கங்களுடன் கூடிய அழகான கற்தேர் ஒன்றினை நிறுத்துவதென்று குழு முடிவு செய்துள்ளது.

திருமலையில் சுமார் 60 அடி உயரமுள்ள ஸ்ரீ நாராயணனின் கல்லாலான திருவிக்ரகத்தை நிலை நிறுத்துவதென்று குழு தீர்மானித்துள்ளது.

தி.தி. தேவஸ்தான கல்வி நிறுவனங்களில் கல்வி பெறும் தி. தி. தேவஸ்தான ஊழியர்களின் பிள்ளைகளுக்கு உதவும் வகையில், அப்பிள்ளைகளின் பெற்றோர்க்கு அதாவது ஊழியர்களுக்கு ஒரு குறிப்பிட்ட தொகையை கல்விப்படியாக வழங்க குழு அனுமதி அளித்துள்ளது.

திருமலையில் வியாபார நோக்கத்தோடு திரைப்படம் எடுப்பதற்கு தடை செய்ய வேண்டுமென்ற ஆந்திர அரசு உத்திரவினை ஏற்றுக்கொள்வதென்று குழு முடிவு செய்துள்ளது.

சென்னையிலுள்ள வி. வி. ஆர். தர்ம சாலையின் எதிர்காலம் நிருவாகம் நன்கு விளங்கிய வேண்டுமென்ற ஆர்வத்தினால், அச்சத்திரத்தினை அதன் செயலாளரான திரு. ரேபல லக்ஷ்மி நரஸா ரெட்டி அவர்கள் தி. தி. தேவஸ்தானத்திற்குப் பரிசாக வழங்கியதை ஒட்டி, அன்னாரை, தங்கப் பதக்கம் ஒன்று அளித்து கௌரவிக்கவும், திருமலைக்கு வரும் போதெல்லாம் அவரை தேவஸ்தானத்தின் முக்கிய விருந்தினராக ஏற்றுக்கொள்ளவும் குழு முடிவு செய்துள்ளது.

திருப்பதியில் முதல் சத்திரதில் தான் கண்டெடுத்த தொகையினை மேலாண்மையிடம் ஒப்படைத்த தி. தி. தே. ஊழியரான திரு. பி. வெங்கட ரத்தினம் அவர்களுக்கு ரூ. 25/-ம், திருப்பதியில் மூன்றாவது சத்திரத்தில் சில குற்றவாளிகளைபிடித்துக்கொடுத்த தி. தி. தே. ஊழியரான திரு. டி. கோதணட செட்டிக்கு ரூ. 50/-ம் ஊக்கத் தொகையாக வழங்க குழு தீர்மானித்துள்ளது.

ஆஸ்தான வித்வானாக ஆண்டு முழுவதும் தேவஸ்தான நிறுவனத்திற்கு தொண்டு புரியும் ஸ்ரீ ஜகன்னாத சார்யலு அவர்களுக்கு மாதந்தோறும் ரூ. 500/- சிறப்பூதியமாக வழங்க குழு முடிவு செய்துள்ளது.

1979-80-ம் ஆண்டுக்கான திருமலைக் கோயிலுக்காக பஹுமான வஸ்தரங்களை வாங்குதற்கு குழு ரூ. 2,73,400 ஒதுக்கியுள்ளது. தன் முடிவினை ஒப்புதலுக்காக ஆந்திர மாநில அறநிலைய ஆணையருக்கு அனுப்பியுள்ளது.

அரசு ஊழியர்களுக்கு அதிகப் படியான பஞ்சப்படியினையும், இடைக்கால நிவாரணமும் வழங்கிடும் வகையில் ஆந்திர மாநில அரசினால் ஒப்புதல் அளிக்கப்பட்ட, 16-3-79 மற்றும் 20-3-79 தேதியிட்ட எம். எஸ். எண். 88 மற்றும் எண். 91 (நிதி மற்றும் திட்டம் F. W. P. C. I.) எனும் அரசு உத்திரவுகளை தி. தி. தேவஸ்தானத்திற்கும் அமுலாக்குவதென்று குழு தீர்மானித்துள்ளது.

சமய நூல்களை வெளியிடுதற்கு ரூ. 50,000/-ம், இலவச 'ஸம்ஸ்கிருத வகுப்புகளை நடத்துதற்கு உதவும் வகையில் ரூ. 50,000/-ம் (இத்தொகை முதலீடு செய்யப்பட்டு அதனால் வரும் வட்டித் தொகை மட்டுமே செலவழிக்கப்படும்) ஹைதராபாத்திலுள்ள சுர பாரதி சமிதிக்கு வழங்க முழு முடிவு செய்துள்ளது.

நாக்பூரில் 'அதிருத்ரா' விழா சிறப்பான முறையில் நடைபெறுதற்கு, அவ்விழாக் குழுவினர்க்கு ரூ. 5,000 வழங்க குழு தீர்மானித்துள்ளது.

ஆந்திராவில் பல இடங்களில் உள்ள ஹரிஜன வாடாக்களில் ராம மந்திரங்களைக் கட்டுதற்கென குழு ரூ. 1,50,000 ஒதுக்கியுள்ளது.

ஆன்மிகம், கலாசாரம் மற்றும் மக்கள் தொண்டு சம்பந்தப்பட்ட காரியங்களுக்கென ஹைதராபாத் ஸ்ரீராம கிருஷ்ண மடத்தாருக்கு ரூ. 12 இலட்சம் நன்கொடையாக வழங்க குழு முடிவு செய்துள்ளது.

இந்து விக்ரகங்கள் மற்றும் சிற்பங்கள் அடங்கிய மியூஸியம் ஒன்றினையும் இந்து சமய நூல்கள் மற்றும் அது சம்பந்தப்பட்ட விஷயங்களைக்கொண்ட நூல் நிலையம் ஒன்றினையும் ஏற்படுத்துவதென்று குழு தீர்மானித்துள்ளது.

★

# அரியுருவம் ஆளுருவுமான அழகன்

திருமால் திருமேனி சர்க்கரையிற் செய்த பால்பணியாரம் போல் மெய்யடியார்கள் மனத்துக்கினியதாய் தெவிட்டாத தேனமுதாய்த் திகழ்கின்றது.

எம்பெருமான் அசுரர்களைத் தீர்த்து அடியார்கள் இடர்களைய, எண்ணற்ற உருவங்களை மேற்கொள்வதாக கீதையில் பணித்துள்ளான். அவைகளிலே தவச்செல்வர்களான முனிவர்கள் கொண்டாடி இதிகாச புராணங்களிலே பரக்கப்பேசிய திருவவதாரங்கள் பத்து.
मत्स्यःकूर्मोवराहश्च नारसिंहोऽथ वामनः ।
रामो रामश्च रामश्च कृष्णःकल्कीति ते दश ॥ "
என்பது பெரியோரின் கணக்கு. திருக்கண்ணபுரத் தெம்பெருமானைப்பாடும் திருமங்கையாழ்வாரும்,

" மீனோடாமை கேழலரிகுறளாய்
முன்னுமிராமனாய்த்தானாய்
—ப்பின்னும்
இராமனாய்த்தா மோதரனாய்
கல்கியுமானான்
தன்னைக் கண்ணபுரத்தடியன்
கலியன் "

என்று அப்பத்து அவதாரங்களையும் ஒன்றாய்க் கோர்த்து அனுசந்தித்திருக்கிறார்.

---

திரு. பி. எஸ். சேஷாத்ரி ஐயங்கார்,
திருப்பதி.

---

இவ்வாறாகத் தன்னையடைத்தாருய்யத் தரணியிலே எவ்வகையான உருவெடுத்துக் கொண்டாலும் அவன் பெருமைகள் சாணையில் உறைத்த மாணிக்கம் போலே சுடர் விட்டு ப்ரகாசிக்கும். "நிலவரம்பிலபல பிறப்பாய் ஒளிவரு முழுநலம்" என்றபடி. உயிரளிப்பான் என்னின்ற யோனியுமாய்ப் பிறக்கச் செய்தேயும் அவன் இமையோர் தலைவனான தன்மை விடான். அவனை "உலகினில் தோற்றமாய் நின்ற சுடராக" ஆண்டாள் பாடியுள்ளார். இவ்விதமான பரத்வ ப்ரகாசனம் பண்ணுமாப் போலே தன் எளிமையும் அவதாரத்தில் அளவின்றி வெளியிடுவான்.

இடக்கை வலக்கை வேறுபாடறியாத ஆய்ச்சியர் சிறுமியர் இல்லம் புகுந்து வெண்ணெய்யுண்டானிவனென்ற ஏச்சுக்கிடமாகி, உரலிடையாப்புண்டு அழுது நோக்கும் எளிமை நினைந்து ஏங்கி உள்ளங்கரைந்துருகிய நம்மாழ்வார் ஆறுமாதம் அவ்வழகில் மோகித்துக்கிடந்தார்.

பக்தர்களிற் சிறந்தப் பிரஹ்லாதனுக்கு எப்போதும் மனக்கண் முன் சாட்சி கொடுத்து, பிறகு அவன் வார்த்தையை மெய்யென நிரூபிப்பதற்காகத் தூணிலிருந்து வெளிப்பட்ட அற்புதமான அழகிய சிங்கப்பிரானுருவை ஆழ்வார்கள் அனைவரும் பலவாறு ஈடுபட்டுப் புகழ்கின்றார்கள். பொய்கைப்பிரானைய கவிஞர் போறேறு இப்படி முழங்குகிறது.

" புரியொருகை பற்றி ஓர் பொன்னாழி
ஏந்தி
அரியுருவும் ஆளுருவும் ஆனான்
எரியுருவவண்ணத்தான் மார்பிளத்த
மாலடியையல்லால்
மற்றெண்ணத்தாருமோ இமை "

என்று.

வலக்கையிலே சக்கரமும் இடைக்கையிலே சங்கமும் ஏந்தி நர உருவும் சிங்க உருவுமாகக் கலந்த திவ்யமங்கள விக்ரஹத்தை விட்டு, அவனடியை விட்டு வேறு எவ்வுருவையும் இமைப்பொழுதும் என் மனத்தினால் நினைக்க ஆகாது என்கிறார்.

நீருண்ட நீல மேகமென கரு மாணிக்க மலையெனக் கருத்த திருமேனியும், அதன் மேல் தாமரை போற் சிவந்த கண்களும், பிடரிமயிற் கூட்டமும், பிறையொத்த வளைந்த கோரைப் பற்களும், திறந்தபெரிய வாயும், அதனுள்ளே அலையும் நாக்கும் இருபுறமும் நீண்டகைகளில் திருவாழி திருவலம் புரிகளின் ஒளி வீச்சும், ஆயிரம் கதிரவர்கள் உதித்தார் போன்ற மணிமகுடமும், அப்பா!



ஆழ்வார்களின் உள்ளம் கொள்ளை கொண்ட சிங்கப்பிரான் அழகும் நம் மால் ஆராயத்தகுமோ.

அமர சத்துருக்களுக்கும், கோழைகளுக்கும் அவ்வுருவம் வியப்புடன் அச்சத்தையே கொடுக்கும். ஏன் வானவர்களுக்கே அஞ்சி ஓடவேண்டியே இருந்தது. "எரிந்த பைங்கண் இலங்கு போழ்வாய் எயிற்றொடிதெவ்வுருவென்று இரிந்து வானோர் கலங்கியோடவிருந்த வெம்மானதிடம் சிங்கவேள்குன்றமே" என்பது மங்கை மன்னன் உரை. அதோடில்லாமல் இவ்வுலகமெல்லாமே அஞ்சிற்று என்கிறார். "அங்கண்ஞாலமஞ்ச அங்கோராளரியாய்" என்று.

அவ்வுருவமே ஆழ்வார்களுக்கு அமைதியுடனும் அழகுடனும் அரவணைக்கும் உருவமாகத தித்திக்கின்றது. ''அழகியான்தானே,அரியுருவம்தானே பழகியவன் தானே பணிமின். குழவியாய்தானே உலகுக்கும் நன்மைக்கும் தன்மையனே மீனாய் உயிரளிக்கும் வித்து'' என்று உலகிற்கு உயிரளித்த காரணவஸ்து மீனாய்க் குழந்தையாய்த் தோன்றியவன் நாராயணனே. அழகிய சிங்க உருவாகிப் பக்தர்களுடன் பழகியவன். அவனைப் பயமின்றி அண்டிப் பணியுங்கள் என்று திருமழிசைப் பிரான் உலகோர்க்கு எடுத்துரைக்கிறார்.

கோபமெல்லாம் பறந்துபோய் மிகத் தெளிவுடன் விளங்கும் நரசிங்கத்தை திருமங்கையாழ்வார் திருவல்லிக்கேணியில் காண்கிறார். மலர் மகள் விரும்பி அணைக்கும் மணவாளனைச் சிங்கவேள் குன்றத்திலே காட்சி தருகிறார் அவருக்கு சிங்கமாயதேவு. அத்தேவனை ''பிறையெயிற்றனல் பேழ்வாய்த்தெள்ளிய சிங்கமாகிய தேவைத்திருவல்லிக் கேணிக் கண்டேனே'' என்றும் ''நம்முடை நம்பெருமான் அல்லிமாதர் புல்க நின்ற ஆயிரம் தோளனிடம்... சிங்கவேள் குன்றமே'' என்றும் மங்கையாளன் பாடுகின்றார்.

முழுதும் சிங்க உருவத்தையோ அல்லது பலபடைகளுடன் கூடிய முழுதும் மனித உருவத்தையோ தனித் தனியே பார்ப்போர் மனதில் பயம் ஏற்படலாம். ஆனால் கசப்புள்ள மருந்தை வெல்லததில் கலந்தாற் போல இரு உருவமும் ஒன்றாகக் கலந்தால் அணுகுதற்கு உடனாகும். மேலும் சர்க்கரை கலந்த பால்போல் அரங்கன் திருவுரு நரங்கலந் சிங்க உருவாய் பட்டருக்குக் காட்சியளிக்கிறது.

'' நரு ஹரிதசயொஃ பச்யந் ஔத்
பத்திகம் கடனாத்புதம்,
நரமுத ஹரிம் த்ருஷ்ட்வைகைகம்
ஸமுத்விஜதே ஜநஃ |

இதி கலு ஸிதாக்ஷீரந்யாயேந
ஸஙகமிதாஙககம
ஸ்புடதரமஹாதம்ஷ்ட்ரம்
ரஙகேநத்ர ஸிமஹமுபாஸ்மஹெ ''

இது ஸ்ரீரங்கராஜஸ்தலத்தில் பட்டரின் அனுபவம். நரசிங்க உருவம் 'ஸிதாக்ஷீரநயாயெந ஸங்கமிதாங்கக' என பாலும் கன்னலும் கலந்து தித்திக்கும் அமுதுமாய் அவருக்கு உள்ளது. இவ்விதமே பல தேவனின் லீலைகளுடன் கலந்த கண்ணனின் பால்யசேஷ்டிதங்கள் சர்க்கரையுடன் கலந்தக்ஷீரம் போல் இனிப்பதாக வேதாந்தவாசிரியர் பணிக்கிறார்.

'' க்ஷீரம் சர்க்கரயேவ யாபிரப்ருதக்
பூதாப்ரபூதைர்குணைஃ
ஆகௌமாரகமஸ்வதந்த ஜகதெ
க்ருஷ்ணஸ்யதாஃ கேளயஃ||

பிறவி முதல் கம்ஸவதம் வரை இருவரின் திவ்விய சேஷ்டிதங்களும் உலகிற்கு சர்க்கரையுடன் பால்போல் இனித்தன எனபது கருத்து. கண்ணன் முகத்திற் கண்கள் அண்டியவற்கு நிறைமதிபோல் குளிர்ந்தும் எதிரிட்டோர்க்கு கதிரவன் போல் கடுமையானதுமாகவும் இருந்தது என்பதை ''திங்களுமாதித்தியனு மெழுந்தாற் போல் அங்கண இரண்டும் கொண்டு எங்கள் மேல் நோக்குதி'' என்றருளிச் செய்தபடி. நரசிங்கன் திருமுகப் பிடரிமயிரும் அட்டஹாஸமும்கோபத்தால் பொரி பறக்கும் கணனுமாக பயத்தைக் கொடுக்கும் போதே அஸுரக் குழந்தையான ப்ரஹ்லாதனுக்கு தாமரைக் கண்ணோக்கத்தால் வுயை என்கிற பாலைப் பெருக்கும்படி தேசிகவள்ளலுக்கு மனக்கண் முன் தோற்றமளித்ததாம்.

திருச்சந்தவிருத்தம் அருளிய திருமழிசைக்கவியரசர் நரசிங்கனின் வடிவழகை திருமுடி தொடக்கமாகத்திரு வடி வரை,

'' கங்கைநீர் பயந்த பாதபங்கயத்
தெம்மண்ணலே!
அங்கையாழி சங்குதண்டு விலலும்
வாளுமேந்தினுய
சிங்கமாய தேவதேவ தேனுலாவு
மென்மலர்
மங்கை மன்னிவாழுமார்ப!
வாழி மேனி மாயனே! ''

என்று அனுஸந்திக்கிறார்.

புனித கங்கையை உலகோருய்வ தற்குப் படைத்துத் தந்த பாத பங்கயமும், ஆழி, சங்கு, வில், வாள், தண்டு எனும் ஐம்படைகளையும் ஏந்தியிருக்கும் அழகிய திருக்கைகளும், தேன் சிந்தும் மெல்லிய தாமரை மலரிலே வளர்ந்த மங்கையும் மன்னி நித்திய வாஸம் பண்ணும்படியான திருமார் பகமும், களைப்பைப் போக்கும் கடல் நிறவண்ணமும் என்னையும் தேவர்களையும் எழுதிக்கொண்டதென்று நரசிங்க உருவிற்குத் தான் தோற்றமையை ஆழ்வார் இங்கு ஈடுபட்டு விளக்குகிறார்.

மேலும் இச்சிங்க வடிவழகு நிகரற்றது என்கிறார்.

'' வால்நிறத்தோர்சீயமாய் வளைந்த
வாளெயிற்றவன்
ஊனிறத்து கிர்த்தலமழுத்தினாய் ''

என்னும் பாசுரத்தில் புருஷ வடிவமான தன்னிலை மாறிச் சிங்கமாகப் பரமன் மாறினாற்போலே அவன் கடல் வண்ணமும்! வால்நிறமாக (வெளுத்ததாக) மாறியதும் ஓர் வித்தை. இவ் வடிவழகின் போக்ய தாதிசயம் ''ஓர் சீயம்'' என்று பேசப்பட்டது-போக்யதையிலும் நிகரற்றமை தோற்ற.

திருப்பாணாழ்வார் ' கரியவாகிப் புடைபரந்து மிளிர்ந்து செவ்வரியோடி நீண்ட அப்பெரியவாய'' நரசிங்கப் பிரான் கண்கள் தன்னைப் பேதையாக அறிவிழந்தவனாகச்செய்தது என்கிறார். இந்த நீண்ட கண்களையே அஹிர்புத்நியன் எனப்படும் சிவபெருமான் மந்திர

(36-ம பக்கம் பார்க்க)

# திருமலை ஒழுகு

'திருமலை ஒழுகு' எனும் இந்நூ தி. தி. தேவஸ்தான கீழ்க்கலை ஆராய்ச்சிக் கழகத்தின் முன்னாள் தமிழ்த் துறைத்தலைவர். திரு. கோ. பாலசுந்தர நாயகர், எம்.ஏ. அவர்களால் தொகுக்கப்பட்டு, 1953-இல் தி. தி. தேவஸ்தான வெளியீடாக வெளியிடப்பட்டது. 'ஸபதகிரி'யின் எண்ணற்ற பல வாசகர்களின் வேண்டுகோளுக்கிணங்க இந்நூல் தொடர் கட்டுரையாக ஸப்தகிரியில் தற்போது வெளியிடப்படுகிறது. (ஆ-ர்.)

முகவுரை:

திருமலையிலும் திருப்பதியிலும் உள்ள கோயில்களில் பண்டைக் காலத்தில் நடந்துவந்தனவாயும், பிற்காலத்தில் ஏதோ காரணம்பற்றி நிறுத்தப்பட்டனவாயும் இருநத பணி முறைகளை ஆகமங்கட்கும், வேதம், உபநிடதங்கட்கும் இயையப் புதுக்கியும், புதுவதாகச் சில நடைமுறைகளை ஏற்படுத்தியும் வைணவ சமயாசாரியர்களுட் பல்லாற்றானும சிறந்து, அறிவு, ஒழுக்கம், முதலியவற்றுள் மேம்பட்டு, விசிட்டாத்துவித சமயத்திற்கு விளக்கம் உணடாக்கி, ''எங்கள் கதியே, ராமாநுசமுனியே, சங்கை கெடுத்தாண்ட தவராசா'' என்று கூறுமாறு உயர்வு பெற்றிருந்த இராமாநுசரும், அவர் வழிவநத சமயக் கொள்கைகளைப் பின்பற்றி அவற்றின்படி ஒழுகி வந்த மற்றையோரும் நிலைநாட்டிய தருமங்களையும, ஒழுங்கு முறைகளையும் விரித்துரைப்பது ''திருமலை ஒழுகு'' எனனும் சிறநத நூல்.

இந்நூல் தோன்றிய பிற்காலத்து உணடாக்கப்பட்ட சில நிகழ்ச்சிகளையும, இந்நூலுட் கூறப்பட்ட சிலவற்றிற்கு ஆதாரமாக உள்ள கல்வெட்டுப் பகுதியின் கருத்துக்களையும், வேறு சில குறிப்புக்களையும் திரட்டி எழுதி அனபர்கட்கு அறிவுறுத்துதல் நலமெனக்கருதி இதனை எழுதலானேன்.

இராமாநுசர் திருமலைக்கு மூன்று முறை எழுந்தருளினர். முதல்





தடவை, திருமலைநம்பி யெனும் அவர் தம் அம்மானிடம் வான்மீகி இராமாயணத்தைப் பாடங் கேட்பதற்காகப் போந்தார். அப்போது, அவர் மலையடிவாரத்திலே தங்கியிருந்தார். ஆழ்வார்கள், திருமலையை மிதித்து ஏறுவதால் அம்மலையின் தூய்மை கெடும் என்று அஞ்சி அடிவாரத்திலிருந்தே பெருமானை மங்களாசாசனம் செய்தருளி நலம் பெற்றனர் என்பதைக் கேள்வியுற்ற இராமானுசரும், திருமலைமேல் கால்வைத்தேற அஞ்சி அடிவாரத்திலே இருக்கத் திருமலைநம்பி நாடோறும் மலையினின்றும் இழிந்து வந்து ஓராண்டு இராமாயண பாடத்தை அவருக்குக் கற்பித்தருளினர்.

• இரண்டாம்முறை, சைவர்களும் வைணவர்களும் திருவேங்கடமுடையானைத் தம் தம் தெய்வமென வாதித்தபோது வேங்கடத்து அப்பனுக்குத் திருவாழி திருச்சங்குகளைச் சாத்தி யருளுதற்காகவும், வேறு பல திருத்தங்கள் செய்வதற்காகவும், திருமலைக்கு எழுந்தருளினர். அப்போது, திருமலை ஏறும்முன் மூன்றுநாட்கள் எதையும் உட்கொள்ளாமல் உபவாசமிருந்து தம் உடலைத் தூய்மையாக்கிக்கொண்டு திருமலை ஏறித் தம் செயல்களை முடித்து மூன்று நாட்களுக்குள் மலையினின்றும் இழிந்தருளினர்.

இவ்வாறு, இவர் மலை ஏறுங்கால், அதனைத் தம் திருவடிகளால் மிதியாதிருப்பதற்காக முழங்கால்களை ஊன்ற வைத்துச் சென்றனர் என்றும், இடையில் செங்குத்தான ஓரிடத்தே இவரால் ஏறமுடியாமல் முழங்கால்கள் முறிநது விட்டன என்றும், அப்போது இவர் செயலற்று மயங்கி விழுந்தனர் என்றும், இதனை யறிந்த திருவேங்கடமுடையான் இவர்க்குமுன் தோன்றி இடையூறுகளைப் போக்கிக் கால்கள் பண்டுபோல் உரம்பெற்று ஏழுதற்குத் தகுதியுடையவாம்படி திருவருள் செய்து மறைந்தார் என்றும், அதனாற்றான் அவ்விடம் முழங்கால் முறி(ச்சா)த்தான் என்று இன்றும் இறந்த காலத்தால் கூறப்படுகின்றது என்றும், கன்னபரம்பரைச் செய்தியொன்று உலவி வருகிறது. இம்முறையில் தான் கோவிந்தராசரை இவர் திருப்பதியில் நிறுவி வழிபாட்டு முறைகளையும் ஏற்படுத்திக் கோயிலைப் பெரிதாக்கினர்.

மூன்றும் முறை, திருவேங்கடச் செல்வம் அழியாமல் இருத்தற் பொருட்டும், அதனைக் காத்து வளர்த்துத் திருப்பணிகள் செய்தற்குரியாரை ஏற்படுத்தற் பொருட்டும் திருமலைமேல் ஏறி அக்கோயிலின் திருப்பணித் தலைமையைத் தாமே மேற்கொண்டும், தமக்கொரு மடத்தைச் சந்நிதிக்கு எதிரிலுள்ள அனுமான கோயிலுக்கு அருகில் கட்டியும், கி. பி. 1052 முதல் 1053 வரை ஓராண்டு தங்கியிருந்து சீயர், ஏகாங்கிகள் நால்வர் ஆகியோரைத் தம்மிடத்தில் நிறுவியும் திருவேங்கடமுடையான் திருப்பணிகள் குறைவின்றி நடக்குமாறு தக்க ஏற்பாடுகளைச் செய்தும் திருவரங்கப்பதிக்குத் திரும்பி யருளினர்.

திருமலையிலும் திருப்பதியிலும் இராமானுசர் செய்தருளிய சீர்திருத்தங்களுக்கும் புதிய வகையில் கோயில் திருப்பணிகளைச் செய்வதற்கும் பெருந்துணையாய் இருந்த அரசன் கட்டியம் யாதவராயன் என்பான். இவன் சோழ மன்னனுக்கு அடங்கிய சிற்றரசன். நாராயணவனத்தைத் தலைநகராகக் கொண்டு அப்பகுதியை ஆண்டவன். இராமானுசரது பெருமைகளை யறிந்து அவருக்குச் சீடனாயினன். இவன் காலம் கி. பி. பன்னிரண்டாம் நூற்றாண்டின் தொடக்கம் என்பது கல்வெட்டுக்களால் அறியக்கிடக்கின்றது

இராமானுசர் திருவேங்கடமுடையானுக்குத் திருவாழி திருச்சங்குகளைச் சாத்தி யருளியபோது திருவேங்கட நாட்டை யாண்டவன் யாதவராயன் எனப்படுகிறான். அவன், கட்டியம் யாதவராயனுக்கு முன் இருந்தவனாதல் வேண்டும் என்பது சிலர் கருத்து. சிலர் அவனே கட்டியம் யாதவராயன் என்பர்.

திருவேங்கடமுடையானைச் சைவர்கள் சுப்பிரமணியக் கடவுள் எனக் கி. பி. பதினொன்றாம் நூற்றாண்டில் மட்டுமே உரிமை கொள்ளத் தலைப்பட்டனர். அதற்கு முன்னும் திருவேங்கடமுடையான் திருக்கரத்தில் சங்கு சக்கரங்கள் இல்லாதிருந்தும்,

(33-ம் பக்கம் பார்க்க)

# அடியேன் அகத்திலமர்ந்த அணியரங்கன்

சென்ற இதழ் தொடர்ச்சி

சந்திர புஷ்கரணியைச் சுற்றிலும் பில்ல தீர்த்தம், ஜம்பு தீர்த்தம், அச்வத்த தீர்த்தம், பலாச தீர்த்தம், புன்னாக தீர்த்தம், வகுன தீர்த்தம், கதம்ப தீர்த்தம், ஆம்ர தீர்த்தம் என எட்டு தீர்த்தங்கள் இருக்கின்றன. மேலும் இத்தீர்த்தங்களோடு எட்டு விருக்ஷங்களால் (பில்வ விருக்ஷம், ஜம்பு விருக்ஷம், அச்வத்த விருக்ஷம், பலாச விருக்ஷம், புன்னாக விருக்ஷம், வகுன விருக்ஷம், கதம்ப விருக்ஷம், ஆம்ர விருக்ஷம்) உபசரிக்கப்படுவதாய் விஷ்ணுவால் அடையப்பட்டதுமான இந்த சந்திர புஷ்கரணியைப் பார்த்தாலும், ஸ்பர்சித்தாலும், அதில் ஸ்நானம் பண்ணினாலும், அதன் பெயரைச் சொன்னாலும், கேட்டாலும் சகல பாபங்களும் போகும். இந்த நவதீர்த்தங்களிலும் ஸ்நானம் செய்து, ஸ்ரீரங்க நாதனைத் தரிசித்து வருபவன், பரிசுத்தமாவதுடன் விஷ்ணு ஸாயுஜ்ய பதவியையும் அடைவான்.

ஸ்ரீரங்க விமானப் பிரதக்ஷிணத்துக்கு, ஆயிரம் அக்னிஷ்டோமத்திற்கும், பதினாயிரம் வாஜ பேயத்திற்கும் ஏற்பட்ட பலன் உண்டு. ரங்க விமான ப்ரதக்ஷிணத்தால் தீர்காயுள், ராஜ்ய லக்ஷ்மி, ரோகமின்மை, புத்ர பௌத்திர லாபம் இவைகள் உண்டாகும். ரங்க விமான ப்ரதக்ஷிணம் செய்வதை விட வேறு தர்மம் கிடையாது. நாராயணனாகவே விளங்குவான். பிரும்மா, தேவர்கள், ஸாத்யர்கள், ரிஷிகள், பித்ருக்கள், வஸுக்கள் முதலானோர் தினந்தோறும் பன்னிரெண்டு தடவை பிரதக்ஷிணம் பண்ணுகிறார்கள். பிரும்ம ஹத்தி, ஸ்திரீ ஹத்தி, சிசு ஹத்தி, கன்றைக் கொன்ற தோஷம் முதலிய யாவும் ரங்க விமான ப்ரதக்ஷிணத்தால் நீங்கும்.

ஸ்ரீரங்கத்தில் ஸப்த பிராகாரங்கள் ஸப்த லோகமாகவும், படைப்பள்ளி வியாகரண சாஸ்திரமாகவும், கோவிலிலும் வீதிகளிலும் செய்யும் கலங்காரம கல்ப சாஸ்திரமாகவும், கருடன் முதலிய வாகனங்கள் சந்தஸ் சாஸ்திரமாகவும், ஆபரணங்கள் ஜோதிஸ் சாஸ்திரமாகவும், ரங்கனுதன் உகக்கும் எல்லா புஷ்பங்களும் சிக்ஷா சாஸ்திரமாகவும், வாத்யங்களின் சப்தம் நிருக்த சாஸ்திரமாகவும் சொல்லப்பட்டிருக்கிறது.

## ஆலய நிர்மாணிகள்:

ஸ்ரீரங்கனுதனின் விசேஷ ஏற்றத்தை நன்குணர்ந்து, தர்ம வர்மா - கிளி சோழன், ராஜ மஹேந்திர சோழன், நந்த சோழன், குலசேகரப் பெருமாள், திருமங்கை யாழ்வார், சோளேந்திர சிம்மன், கங்கை தேவர், சிங்கணன் தண்ட நாயக்கர், விக்கிரம சோழனுன் அகளங்கன், சுந்தர பாண்டியத் தேவர் குலோத்துங்க

ஸ்ரீ உ. வே. கோ. க. வ. கோவிந்தராஜ பாவனுச்சார்யா ஸ்வாமி-ஸ்ரீரங்கம்.

சோழன், கம்பைய தண்டைய நாயக்கர், கரிய மாணிக்கத் தண்டைய நாயக்கர், மலேப்பெருமாள், வீர நரசிங்க தேவர், ஆஹானார் வரநாத ராயர், திரி விக்ரம சோழன், பள்ளி கொண்ட சோழன், வல்லபதேவன், கலியுக ராமன், கோபண உடையார். உத்தம நம்பிகள் ஆகியவர்களும் இன்னும் பல பல மஹான்களும் 'திருவரங்கம் பெரிய கோயிலே' ஸப்தா வரணத்தோடு ஆங்காங்கே விசேஷ உத்ஸவ மண்டபாதிகளும் அமைத்து இப்பூமண்டலத்திலேயே ''இதற்குச் சமமான கோயிலே இல்லை'', என்று பறை சாற்றும்படி பெரிய கோயிலாக நிர்மாணித்தார்கள். கோயிலுக்குள்ளே பல வ்யூகமூர்த்திகளேயும், ஆழ்வாரா சார்யர்களின் சன்னதிகளேயும் அமைத்தார்கள். வெளியே திருக்குறளப்பன், காட்டழகிய சிங்கர் சன்னதிகளேயும் அமைத்தார்கள்.

முகம்மதியர்களின் ஆதிக்ய காலத்தில் டில்லி பாதுஷா எல்லாக் கோயில்களேயும கொள்ளை கொண்டு, விக்கிரகங்களேயும், திருவாபரணங்களேயும் எடுத்துக் கொண்டு போந்த காலத்தில் இங்குள்ள அழகிய மணவாளப் பெருமாளேயும் சேரகுலவல்லி முதலிய நாச்சியார்களேயும் எழுந்தருளப் பண்ணிப் போனவளவில், பின் துடர்ந்தவல்லி என்கிற அம்மையாரின் உள்ளறிந்த பெறு உதவியால், இங்குள்ள ஸ்தலத்தார்கள், திருவரங்க பெருமாள் அரையரின் கான ரஸ வைபவத்தால் அழகிய மணவாளப் பெருமாளை எழுந்தருளப் பண்ணிக் கொண்டு வந்ததும், அழகிய மணவாளரின் பேரில் விசேஷ காதல் கொண்ட டில்லீச்வர பாதுஷாவின் மகள் சுரதாணி என்கிற மாது பின் துடர்ந்து திருவரங்கம் வரை வந்தவளவில் சன்னதி கல்திரையிட்டிருந்த படியைக் கண்டு, சுரதாணி சிந்தயந்தியைப் போலே விரகாதிசயத்தாலே சரீரத்தை விட்டாள்.

டில்லியிலிருந்து அழகிய மணவாளப் பெருமாளை எழுந்தருளப் பண்ணிக் கொண்டு வருகிற பெரியோர்களேப் பின் துடர்ந்து பாதுஷாவின் ஸைந்யங்கள் வருவதைக் கண்டு, பெருமாளை ரக்ஷிக்கும் பொருட்டு இரு கொடவர்கள் மட்டும் திருமலை மலேச்சரிவிலே பெருமாளை வைத்து நித்தியாராதனுதிகளை நடத்தி வந்தார்கள். இப்படி பல வர்ஷங்கள் ரக்ஷித்து வந்த பின்பு, வெகு காலம் கழித்து இது விவரம் சந்திரகிரி பிரபுவுக்குத் தெரிந்து, அவர் அனுமதியின் பேரில், கோபண உடையாரும், விருப்பண்ண உடையாரும் பெருமாளை திருவரங்கத்

திருப்பதிக்கு எழுந்தருளப் பணணிக் கொண்டு வந்தார்கள். இங்குள்ளவர் கள் இவர் நம பெருமாளாக இருக்க மாட்டார் என்று அதிசங்கயை ஏற் படுத்தின வளவிலே, அந்தகனும் வயோவிருத்தனுமான ஒரு வண்ணுன் நம் பெருமானின் திருமஞ்சன தீர்த் தத்தை ஸ்வீகரித பின்பு ''நம் பெரு மான் இவர்தான்'' என்று நிர்த்தார ணம் செய்ய ஸ்தலத்தார்கள் நம் பெருமானேச் சன்னதியில் சேர்த்து, தாயார் சன்னதி வில்வ மரத்தடியில், நிக்ஷேபமாக கலாப காலத்தில் எழுந் தருளப் பண்ணிய தாயாரின் கிரீடம் வெளியே தெரிய, அவரையும் எடுத்து சன்னதியில் சேர்த்தார்கள்.

காட்டுமன்னுர் சன்னதியில் சொட் டக் குலத்தில் அவதரித்த ஸ்ரீமந் நாத முனிகள் என்கிற மஹான், லுப்த மாகப் போயிருந்த ஆழ்வார்களின் பிரபந்தங்களே புனருத்தாரணம் செய்ய ஸங்கல்பித்துக் கொண்டு, நம்மாழ்வார் விஷயமாக மதுரகவிகள் அருளிச் செய்த ''கண்ணிநுன சிறுத் தாம்பு'' என்கிற பத்து பாசுரத்தை லபித்து, யோகதசையிலே ஆழ்வாரை ஸாக்ஷாத்கரித்து, தன் முகமாக ஆழ் வார்கள் பதின்மரும் ஆண்டாளும் அளிளிச் செய்த திவ்வியப் ப்ரபந்தங் களே லபித்து, கிருதார்த்தராய், பின் னர் ஆழ்வாா ஸாதித்த பவிஷ்யதா சார்ய (உடையவர்) விகரஹத்தையும் பெற்றுக் கொண்டு திருவரங்கம் திருப் பதி யேற எழுந்தருளி ஸ்ரீ கார்யம் நிர் வஹித்தார் இத்திருப்பதியில் திரு வத்யயனேத்ஸவம் இருபது நாட்கள் ஏற்படுத்தி, முதலாயிரம், பெரிய திரு மொழி இவைகளே முதல் பத்து நாட் கள் இசையுடன் தேவகானத்தில் பெரு மாள் கேட்டருளும்படிக்கும், ஏகாதசி துடக்கமான அடுத்த பத்து நாள் ஆழ்வாரின் திருவாய்மொழியை இசை யுடன் தேவகானத்தில் கேட்டருளும் படிக்கும், அடுத்த மறுநாள் திருமடல் ஈராக இயற்பா பிரபந்தத்தை இய லாக கேட்டருளும்படிக்கும், இருபது நாளும் மதுரகவி போல அபிநயத் துடன் சேவித்தும், தம்முடைய பர ஹினேயரான கீழை அகத்தாழ்வானுக் கும், மேலே அகத்தாழ்வானுக்கும் திவ்வியப் பிரபந்தங்களே இசையுடனே ஸாதித்து, தம்மைப்போல் திருமொழி திருவாய்மொழிகளே திருநாட்களில் சேவிக்கச் சொல்லி நியமித்தருளினுர். இவர்களும் நன்ருகச் சேவித்து பெரு மாளே மிகவும் உகப்பிக்க, பெரு மாளும் உகந்தருளி இவர்களில் ஒருத் தருக்கு ''மதியாத தெய்வங்கள் மன முறை வாணப் பெருமாளரையர்'' என்றும், ஒருத்தருக்கு, ''நாத வினேத அரையா'' எனனும் திருநாமம் ஸாதித்தார். பின்னர் இவர்களுக்கு "கோயிலுடைய பெருமாள் அரயர்'' என்கிற பிருதும் "வரம் தரும் பெரு மாள் அரையர்'' என்கிற பிருதும் ஏற்பட்டது. இவர்களுக்கு காயக ஸார்வபௌமன் என்கிற மேன்மை தோன்ற ''அரையர்'' என்கிற திரு நாமமும் பிரபுத்வ சூசகமான குல்லா யும், தொங்கல் பரிவிட்டமும் ஏற் பட்டது.

நாதமுனிக்குப்பின் உய்யக்கொண் டாரும், மணக்கால் நமபியும், தரிசனத் தையும், ஸ்ரீ கார்யத்தையும் நிர்வ ஹித்து பின்னர் நாதமுனிகளின் நிய மனப்படி அவர் திருப்பேரனுர் ஸ்ரீ ஆள வந்தார் நிர்வஹித்து, அவருடைய நினைவுக்கு இணங்கி, 'ஸ்ரீராமானுஜர்' தனது பரஹினீயரான முதலியாண் டானே துணேயாக வைத்துக்கொண்டு, பெருமாள் காரியங்களனேத்தையும், சீர்திருத்தம் பண்ணி, சன்னதி பரிகரங் களே பத்துக்கொத்தாகப் பெருக்கி, திருப்பதியார், திருப்பணி செய்வார், பாகவத நம்பி, உள்ளூரார், ஸ்தானத் தாா, பட்டாள கொத்து, ஆரிய படான், தாச நம்பி கொத்து எனப் பெயரிட்டார். திருநகரியிலிருந்து திரு வத்யயனேத்ஸவத்திற்கு ஆழ்வார் எழுந்தருளக் கூடாமையால் கோயிலி லேயே எல்லா ஆழ்வார்களேயும், நாத முனிகளேயும் திருப்பிரதிஷ்டை செய் வித்து திருவத்யயனேத்ஸவத்தை அதி விமரிசையாக நடத்தினுர்.

நாதமுனிகளுக்குப்பின் கோயிலி லேயே ஏற்பட்ட கலாபத்தின் காரண மாக, ஸ்ரீ பாஞ்சராாதராகம பூஜை நின்று, ஸ்ரீ வைகானஸ பூஜை நடக்க உடையவர் மறுபடியும் நம்பிமாரை நியமித்து பாரமேச்வர ஸம்ஹிதா ப்ரகாரம் திருவாராதனுதி கள் நடத்தும்படி செய்து, பெருமாளு டைய ஸகல கார்யங்களேயும் ஆராய்ந்து திருவரங்கேசருடைய நித்ய நைமித்திக் கார்யங்களே சர் வோத் க்ருஷ்டமாகவும், சாச்வத மாகவும் நடக்கும்படி ஏற்பாடுகளேப் பண்ணி முதலியாணடானுக்குச் செங் கோல் வரிசையை ஸாதித்தார். ஸ்ரீ உடையவர் நியமனப்படி முதலியாண் டானும் குறட்டிலே இருந்து கோயில் கார்யத்தையும், கருவூலக வாசலிலே இருந்து திருமேனி உபசாரத்தையும், சன்னதியிலே இருந்து திருப்பவள உப சாரத்தையும், உடையவர் நியமனப் படி அனேத்தழகும் கண்டருளப் பண் ணிக்கொணடிருந்தார். பின்னர் சன் னதி நிர்வாஹம் பூராவும் முதலி யாண்டான் திருவம்சத்திற்கு இருந் தது. காலக்ரமத்தில் இது மாறி விட்டது.

தர்சன நிர்வாஹம் உடையவருக்கு பின் எம்பார்-பட்டர் - நஞ்சீயர் - நம் பிள்ளே, வடக்குத் திருவீதிப் பிள்ளே, பிள்ளே லோகாச்சாரியார், திருவாய் மொழிப்பிள்ளே, ஸ்ரீமந் மணவாள மாமுனிகள் இவர்கள் ஸ்ரீ ரங்கத்தி லேயே இருந்து கொண்டு "ஸ்ரீராமானு ஜார்ய திவ்யாக்ஞையை'' நன்கு பேணி நடத்திக்கொண்டு வந்தார்கள்.

ஸ்ரீமநமணவாள மாமுனிகள் என் கிற பெரிய ஜீயர் திருவாய்மொழி காலக்ஷேப கோஷ்டியில், நம்பெரு மாள் சிஷ்யராக அமர்ந்து பெரிய திரு

(32-ம் பக்கம் பார்க்க)

அத்தியாயம்–10

விபூதி யோகம்: பகுதி – 10




# கீதை காட்டும் நல்வழி

எங்கே செல்வம இருக்கிறதோ அங்கே லக்ஷ்மி அலலது திருமகள வாசம் செய்கிருள் என்று நாம் கூறு கிறோம். திருமகள் இருக்கும் இடத் தில் திருமாலும் இருப்பார். எனவே எங்குச் செல்வம் உளதோ அங்கே இறைவனே உள்ளான்.

ஒருவனது வாழ்வில் முன்னேற்றத் திற்கு உறுதுணையாகப பல தெய்வீகக் குணங்கள் வேணடப்படுகின்றன. இவற்றுள் பகவான் குறிப்பாக ஏழு குணங்களைக் குறிப்பிடுகிருர். புகழ், திரு, சொல், நினைவு, அறிவு, திண்மை, பொறுமை ஆகியவையே அவை. இவ் வேழையும் தமது பெண்மையின் வடி வங்களாக அவர் கூறுகிருர்.

புகழைத்தேடி ஓடுவது நம்போன்ற மாந்தரது இயல்பு. ஆனல் உலகில் ஒரு சிலரைப் புகழ் தேடி ஓடும். அவர் களே மகான்கள். நம் வாழ்க்கை வாழுமிடத்து நம்மைப் புகழ் தானே தேடி வந்தடைகிறது. குணங்களுடன் கூடிய ஒருவனுக்குக் கீர்த்தியும் வந்து சேருகிறது. 'ஈதல் இசைபட வாழ்தல் அதுவல்லது ஊதியம் இல்லை உயிர்க்கு' என்ற வள்ளுவரின் வாக்கிற்கேற்ப, பணிவு, இன்சொல், ஈதல், அறிநெறி முதலியவற்றுடன் நாம் வாழ்ந்தால் நாம் விரும்பாமலேயே நமது புகழ்

திரு. டி. கே. நாராயணன், M.Sc.,
ஆசிரியர் ''சமய ஜோதி'' மதுரை.

உலகெங்கும் பரவுகிறது. ஸ்ரீரமணர் ஒருவரும் அறியாத வண்ணம் திரு வண்ணமலையில் விருபாக்ஷ குகைகளில் பல்லாண்டுகள் தவமியற்றி பின்னர் பற்றற்ற மக்கட்தொண்டு செய்தார். தக்ஷிணேஸ்வரத்தில் அம்பிகையை உளமுருக வழிபட்டு வந்தார் ஸ்ரீராம கிருஷ்ண பரமஹம்ஸர். இவர்களைப் போன்ற எத்தனையோ மகான்கள் ஒரு வரும் அறியாத வண்ணம் ஒதுங்கி வாழ்ந்தார்கள். அவர்கள் ஒருக் காலும் புகழைத் தேடிப் போனதே கிடையாது. ஆனல் நடந்தது என்ன? புகழ் அவர்களைத் தேடிப் போயிற்று. உலகமே அவர்களது காலடியில் விழுந்து வணங்குகிறது. இறைவனுக் காக, சதா இறையுணர்வில் ஒன்றித்து வாழ்ந்தவர்கள் அவர்கள். எனவே இறை அம்சமான புகழ் அவர்களுக்கு உரியதாயிற்று.

எல்லா வடிவங்களும் நம் மனதைக் கவருவதில்லை வடிவம் பொருத்த மானதாக இருந்தால் அங்கே அழகு பொலிகிறது. எல்லா ஓசையும் நம் காதுக்கு இனிமையாக இருப்பதில்லை. ஓசையில் அழகு பொலிந்தால் அந்த ஓசை இசையாகிறது. அதுபோல அசைவில் அழகு திகழ்ந்தால் அது ஆடல் அல்லது நாட்டியம் ஆகிறது. இறைவனே இசை வடிவினன். இறை வனே அழகன். இறைவனே ஆடலர சன் அல்லது நடராஜன். முருகன் என்ற சொல்லே அழகன் என்றுதான் பொருள்படுகிறது. எனவே எங்கெல் லாம் ஸ்ரீ அல்லது திரு திகழ்கிறதோ அங்கெல்லாம் தெய்வாம்சம் திகழ் கிறது நாம் நமது பெயர்களுக்கு முன்னர் ஸ்ரீ அல்லது திரு என்பதைச் சேர்ப்பதன் அடிப்படைக் கருத்தும் அதுவேயாம்.

''யா காவாராயினும் நா காக்க'', ''சொல்லுக சொல்லிற் பயனுடைய'' என்ற வாக்கியங்களெல்லாம் நாம் சிந்தித்துப் பேச வேண்டியதன் அவசி யத்தை வலியுறுத்துகின்றன. சொற கள் பேச வேண்டியதன் அவசியத்தை வலியுறுத்துகின்றன. சொற்கள் தவ முன இடத்தில் தவமுன பொருளில் பயன்படுத்தப் படுகின்றவிடத்து குழப் பத்தையும் சண்டையும் உண்டாக்கு கின்றன. சிறியவர்களாயின் நன்கு பேசிப் பழக வேண்டும். பெரியவர் களாயின் பேசாதிருந்து பழகவேண்டும். எவ்வளவுக்கெவ்வளவு நாம் சிந்தித்த பின்னர் பேசுகின்றோமோ அந்த அளவு நமது சொற்களுக்குச் சகதியும் வன்மை யும் அதிகரிக்கும். சளசளவென்று ஓயாது பேசும் சுபாவமுள்ளவர்களின்

# அனுமன் துதி

திரு. கே எஸ். சங்கர நாராயணன,
கல்பாக்கம்.

பக்தியின் உருவம் நீ,
சக்தியின் சிகரம் நீ,
புத்தியின் உறைவிடம் நீ,
முத்தி தந்திடுவாய் நீ!

வீமனின் சோதர! உன்னை
எமனும் என் செய்வான்?
ராமனின் தாசனே! உன்னைக்
காமனின் கணைகள் என்செயும்?

திடமான நெஞ்சினேடு பெருங்
கடலைத் தாண்டியே நீயும்
இடமெலாம் இலங்கையில் தேடியே
சுடர்க்கொடியைக் கண்டாயே!

மனமெலாம் மகிழ்ந்து
கனவெலாம் நினைவாகி
தேவியை வணங்கிய நீ
பாவியை நடுங்க வைத்தாய்!

நாயகனுக்குதவினுய் நீ,
நாயகன் அடைந்தான் சீதை,
நாயகனையே எண்ணும் நீ,
நாயகனுய் எனக்கு விளங்குவாயே!

அஞ்சனையின் அருமைந்தனை,
தஞ்சமென அடைந்திட்டால்
வஞ்சமிலா நெஞ்சம் வந்திடுமே,
பஞ்சமெலாம் பறந்திடுமே!

ராம பக்தனும் உனைப்பணிந்திடில்
காமமும் விலகுமன்றே!
தாமஸ குணமும் நீங்கி என்றும்
சேமமாய் வாழ்வோம் புவியினில்!

பண்பும் வளரும், பக்தி பரவும்,
உண்மை உயரும், சக்தி சேரும்,
ஆண்மை பெருகும், ஆசை ஒழியும்
உண்மை இதுவே உன் அருளாலே!

வாயு புத்திரனை நீ நினைத்தால்
ஆயுள் நீளுமே—என்றும்
நோயும் நெருங்கா உன்னை,
ஓயும் தொல்லையாவும் இன்றே!

ஒன்றையே என்றும் எண்ணி,
இரண்டையே செபமும் செய்வாய்!
மூன்றையெலாம் பெற்று
என்றும் நீ வாழ்கின்றுயே!!

சொற்களுக்கும் எந்தவித மதிப்பும் இல்லாதிருப்பதை நாம் சமூகத்தில் காணலாம். எத்தனையோ பேருடைய பேச்சை நாம் அனுருடம் கேட்கிருேம். அவையெல்லாம் நமது மனத்தில் எநத விதப் பதிவையும் ஏற்படுத்துவதில்லை. ஆனுல் ஒரு சிலருடைய, குறிப்பாக மகான்களுடைய ஒரு சில சொற்கள் நம் மனத்தில் பசுமரத்தாணி போன்று பதிகின்றனவே. ஏன்? அவர்களது சொல்லால் தெய்வாம்சம் திலங்கு கிறது. சக்தி சொல் வன்மையாகப் பரிணமிக்கையில் அவள் வாணி எனப் படுகிருள். இறையருளால்தான் சொல்வன்மையும் வாய்க்கப்பெறும்.

நேற்றுச் சாப்பிட்ட உணவு வகைகள் நம்மில் பெரும்பாலோருக்கு இன்று நினைவுக்கு வருவதில்லை. ஆனுல் என்றே எங்கோ பார்த்த நபர்களது பெயரையும் ஊரையும் குறிப்பிட்டுச் சொல்லவல்ல அபார நினைவு, சக்தி மகான்கள் பலரிடம் இருக்கக் காண்கிருேம். சிவானந்தாசிரமத்தில் குருதேவர் ஸ்ரீசுவாமி சிவானந்தர் தம்மைத் தரிசிக்க வந்த பல்வேறு நாடுகளைச் சேர்ந்த பக்தர்களை அவர்களது பெயரிட்டு அழைத்து அவர்களது க்ஷேமநலன்களை விசாரித்த விதம்கண்டு அவரது அமானுஷ்யமான நினைவு சக்தியைப் பாராட்டிச் சொல்லாதவர் கிடையாது. நினைவு தெளிந்துருப்பது சக்தியின் அம்சமாகும். அது ஒரு தெய்வீக சம்பத்து ஆகும்.

அநேக சாஸ்திரங்களைக் கற்றுல் மட்டும் போதாது. அவற்றின் உட்பொருளை உள்ளபடி அறிந்து நல் அறிவைப் பெற்று விளங்குவதே முக்கியமாகும். நல் அறிவு உடையவர்கள் மேதைகள் எனப்படுகின்றனர். மேதையும் சக்தியின் பிரபாவமாகும். துன்பங்களும் தொல்லைகளும் குறுக்கிடுவது வாழ்வில் இயற்கை. மென்மேலும் துன்பங்கள் வந்துற்ற போதும் அவற்றைக் கண்டு கலங்காது எதையும் தாங்கும் இதயம் படைத்திருப்பது திருதி அல்லது திண்மையாகிறது. துணிவு என்றும் அதைச் சொல்லலாம்.

சிறுசிறு தொல்லைகளையெல்லாம்பெரிது படுத்தி ஏதோ வரக்கூடாதது தங்களுக்கு வந்து விட்டதாகக் கருதி துரும்பைத் தூணுக்கி மன வலிமை இழந்து அவற்றை எதிர்த்துச் சமாளிக்கத் தெரியாது கவலைப்பட்டுவியாதிகளுக்கு இலக்காவோரையும், தற்கொலை செய்து கொள்ளும் கோழைகளையும் உலகில் நாம் நிரம்பக் காணலாம். அவர்களெல்லாம் திருதி அல்லது துணிவு அற்றவர்கள். மாருக, 'எப்பேர்ப்பட்ட துன்பம் வரினும் வரட்டும், அதை நான் சமாளித்தே தீருவேன்' என்ற துணிவு உடையவர்களுக்கு வாழ்வில் துக்கம் என்று ஒன்று இல்லை. 'துணிவே துணை', 'துணிந்தால் துக்கம் இல்லை' என்ற பொன்மொழிகளைத் துணையாகக் கொண்டு வாழ்க்கை நடத்த நாம் கற்றுக்கொள்வோமேயாகில், காரியங்களில் நமக்கு வெற்றி உண்டாவது திண்ணம்.

நாம் உணவருந்திக் கொண்டிருக்கிருேம். அப்பொழுது தவறுதலாக பல்லானது நாக்கைக் கடித்து விடுகிறது. வலி தாங்க முடியவில்லை. அதற்காக நாம் பல்லை நொந்து கொள்வது கிடையாது ஏன்? பல்லும் நம்முடையது. நாவும் நம்முடையது. நமது பல் நமது நாக்கைக் கடித்து விட்டால் யார் யாரை நொந்து கொள்ளமுடியும்? அந்த சமயத்தில் நாம் பொறையே வடிவெடுத்தவர்கள் ஆகிருேம். ஒவ்வொருவனும் தான்செய்த குற்றத்தைத் தானே மன்னித்துக்கொள்ளுகிறுன். தூணனைய தனது குற்றத்தைத் துரும்பென மதித்து தன்னை மன்னித்து விடும் ஒருவன, பிறரது துரும்பனைய குற்றத்தையும் தூணுக்க முயன்று அவனைக் கடிந்து கொள்கின்றுனே. அது எதனுல்? தனக்கொரு நியாயம் பிறர்க்கொரு நியாயம் என்ற உணர்ச்சி அவனிடம் மிகுந்து காணப்படுவதனுல் தான். பிறர் செய்த குற்றத்தையும் தீங்கையும் பொறுத்துக் கொள்ளுதல் க்ஷமை அல்லது பொறையாகிறது. தம்மை எதிரிகள் சிலுவை

(29-ம் பக்கம் பார்க்க)

# திருப்பல்லாண்டின் சிறப்பு

ஆழ்வார்கள் அருளிச் செய்த நாலாயிர திவ்யப்பிரபந்தத்தில் திருப் பல்லாண்டு முதன்மையானது. பன்னிரண்டு பாட்டுக்கள் கொண்ட இப் பதிகம் பெரியாழ்வாரால் இயற்றப் பட்டது. ஸ்ரீமன் நாராயணனே பரம் பொருள் என்று நிர்ணயம் செய்த பெரியாழ்வாருக்கு கருடனுடன் லக்ஷ்மி ஸமேதனை எம்பெருமான் ஸேவை சாதித்ததின்பேரில் பொங்கும் பரிவாலே இப்பிரபந்தம் செய்யப் பட்டது. இப்பிரபந்தத்திற்குப் பூர்வாசாரியர்களுள் முதல்வரான ஸ்ரீமந்நாதமுனிகளும் பாண்டிய பட்டரும் தனியன்கள் அமைக்க, பல ஆண்டுகளுக்குப் பிறகு பரம காருணிக ரான பெரியவாச்சான்பிள்ளை வியா க்யானம் செய்ய, அதனால் வந்த ஏற்றத்தைஎண்ணி மணவாளமாமுனிகள், "உண்டோ திருப்பல்லாண்டுக்கு ஒப்ப தோர் கலைதான்........." என்றும், "வேதத்திற்கு ஓமென்னதுபோல் உள்ளதுக்கெல்லாம் சுருக்காய்......" என்றும் இத்திருப்பல்லாண்டின் பெருமையை உபதேசரத்தின மாலையில் இவ்வுலக மக்கள் அனுபவிக்கச் செய் தார்.

ஸர்வேச்வரன் திருவுள்ளமறிந்து அருளிச் செயல்களைச் செய்தவர்கள் ஆழ்வார்கள். ஆழ்வார்கள் திரு வுள்ளம் அறிந்து அருளிச் செயல் களுக்கு வியாக்யானம் செய்தவர்கள் ஆசார்யர்கள். இவர்களுள் பரம காருணிகரான பெரியவாச்சான் பிள்ளை திருப்பல்லாண்டின் சிறப்பைத் தனது வியாக்யானத்தில் உலகோர்க் கும் தெரியும்படி உயர்த்தியதை கீழ் அறிவோமாக:

பெரியாழ்வார் விஷ்ணுதான் பரம் பொருள் என்று வல்லபதேவ பாண்டி யன் சபையிலே நிர்ணயம் செய்த பின்னர், வல்லபராஜன் மிகவும் களிப் படைந்து, ஆழ்வாரை யானை மேல் பவனிவரச் செய்து, பல விருது களைக் கொண்டு ஆழ்வாரைப் போற்றி னன். அச்சமயத்தில் இக்கோலத்தைக் காண, சேஷபூதரான பெரியாழ்வார் அதிசயிக்கும்படி சேஷியான எம்பெரு மான் கருடாரூடனாய், லக்ஷ்மி ஸமேத னாய் ஆகாயத்திலிருந்து ஸேவை ஸாதிக்க, இவ்வதிசயத்தைக் கண்ட ஆழ்வார் ஸர்வஸ்வாமியான எம்பெரு மானுக்கு என்ன தீங்கு வருகிறதோ என்று எண்ணி பயத்தால் மங்களா சாசனம் செய்தார்.

இப்பிரபந்தத்தில் முதலிரண்டு பாட்டால் ஸௌந்தர்ய, ஸௌகுமார் யாதிகல்யாணகுணத்தோடு விளங்கும் எம்பெருமானைப்பற்றியும், அவரது உபய விபூதியோகத்தைக் குறித்தும்,


திரு. மா. வரதராஜன்

திருப்பதி.


காலமுள்ளவளவும் இவ்வடிவழகு மாறாமல் நித்யமாக இருக்க வேண்டும் என்றும் தாமே பல்லாண்டு பாடுகிறார் ஆழ்வார். அதனால் தனக்கு திருப்தி பிறவாமையால், மேல் மூன்று பாட் டில் மங்களாசாசனம் பண்ணுவதற் காக பகவத்சரணார்த்திகளையும், ஆத் மானுபவம் பண்ணும் கைவல்ய நிஷ் டர்களையும், உயர்ந்த செல்வம் விரும்புவர்களையும் அழைக்கின்றார். அதற்கு மேல் மூன்று பாட்டால் அவர்கள் தம்முடன் சேர்ந்து பல் லாண்டு பாட இசைவதை அருளுகிறார். அதற்கும் மேல் மூன்று பாட்டில் அவர் களுடன் பல்லாண்டு பாடி அருளு கிறார். கடைசி பாட்டால், இத்திருப் பல்லாண்டின் பலனைக் காட்டுகிறார்.

முதலில் ஆழ்வார் எம்பெருமானின் திவ்ய மங்களத் திருமேனியைக் கண்டு, "பல்லாண்டு பல்லாண்டு பல்லாயிரத் தாண்டு" என்று மங்களாசாசனம் செய்ய, அதனால் களிப்படைந்த எம் பெருமான் தனது தோள் வலிமை யைக் காட்ட, ஆழ்வார் இதற்கு என்ன தீங்கு வருகிறதோ என்று எண்ணி "பலகோடி நூறாயிரம் மல் லாண்ட திண்டோள் மணி வண்ணா!" என்று புகழ்ந்து, அதனால் ஏற்பட்ட பரிவால் தானும் எம்பெருமானுடன் பிரியாமல் கைங்கர்யம் செய்ய, "அடியோமோடும் நின்னோடும் பிரி வின்றி ஆயிரம் பல்லாண்டு" என்று வேண்டினார். மேலும் எம்பெருமான் வல மார்பினில் நித்யமாய் வீற்றிருக் கும் பெரிய பிராட்டியாருடன் ஸேவை சாதிக்க, ஆழ்வார் பெரிய பிராட்டி யாருக்கும் பல்லாண்டு பாட, இவ் வளவுக்கும் ஆழ்வாரின் பயம் தெளி யாமையைக் கண்ட எம்பெருமான் தன் வலக்கை ஆழியையும் இடக்கைச் சங்கையும் பிரகாசிக்கச் செய்தார். ஆழ்வார் அவர்களுக்கும், "வடிவார் சோதி வலத்துறையும் சுடராழியும் பல்லாண்டு, படைபோர்புக்கு முழங் கும் பாஞ்சசன்னியமும் பல் லாண்டே" என்று மங்களாசாசனம் செய்தார்.

ஆக, ஆழ்வார் முதலிரண்டு பாட் டால் எம்பெருமானுக்குத் தான் மட் டும் பல்லாண்டு பாடியதில் திருப்தி ஏற்படாததால் மேல் மூன்று பாக் களில் தம்மைப் போன்று வேறொரு பலனையும் எண்ணாமல் எம்பெரு மானையே தஞ்சம் என்று இருக்கும் அநந்ய பிரயோஜனர்களான அடியார் குழாங்களையும், ஆத்மானுபவத்திற் காக எம்பெருமான் ஒருவனையே எண் ணும்கைவல்யார்த்திகளையும், உயர்ந்த செல்வம் பெறுவதற்காக எம்பெரு மானையே எண்ணும் ஐச்வர்யார்த்தி களையும் பல்லாண்டு பாடுவதற்கு அழைக்கிறார்.

''வாழாள் பட்டு..... ...கூறுதுமே'' என்கிற பாட்டால், எம்பெருமானுக்கு அபிமானிகளாய் இருந்து, கைங்கர்ய போகத்துக்கு இசைந்து வாழ்நாளை நடத்தும் அநநய பிரயோஜனர்களை, அன்று கையும் வில்லுமாய் சிறிச் சிவந்து இலங்கையில் உள்ள அரக்கர் கள் மடியும்படி படையெடுத்த வடி வழகுக்கு மங்களாசாசனம் பண்ணுத குறைதீர இன்று பல்லாண்டு பாடு வதற்கு அழைக்கின்றுர் ஆழ்வார்.

''ஏடு நிலத்தில்.........கூறுவனே'' என்கிற பாட்டால், ஆத்மானு பவத்தை விரும்பி எம்பெருமான் ஒருவனையே தஞ்சமாகப் பற்றுபவர் களான கைவல்யார்த்திகளைத் திருத் திப் பணி கொள்ள ஒரு கட்டளை இடு கிறுர் ஆழ்வார். அதாவது இவ்விருள் தருமாஞலத்தில் மடிவதற்கு முன், எம்பெருமானுக்கு அடிமை செய்யும் கோஷ்டியில் சேர வேண்டும் என்கிற நினைவையுடையவர்களாக இருநதால், ஆத்மானுபாவம் எனகிற ஒரு வரம்பை விட்டு, கிராமத்தில் உள்ள வர்களுக்கும், நகரத்தில் உள்ள அறி வாளிகளும் நன்கு அறியும்படி திரு

காளியமர்த்தனஞக ஸ்ரீ கிருஷ்ணன்

திரு சி பாவஞசந்த், திருப்பதி.



அஷ்டாக்ஷர மந்திரமான ''ஓம் நமோ நாராயணுய'' என்பதைச் சொல்ல வாருங்கள் என்று அழைக்கிறுர்.

'' அண்டகுலத்துக்கு.............பல் லாயிரத்தாண்டென்மினே'' என்கிற பாட்டால், உயர்ந்த செல்வத்தைப் பெறுவதற்காக எம்பெருமான் ஒரு வனையே பற்றுபவர்களான ஐச்வர் யார்த்திகளை, எம்பெருமானுக்கே அடிமை செய்யும் குலமான தொண்டர் குலத்தில் சேர்ந்து (ஆழ்வார் கோஷ்டி யில்) எம்பெருமானின் திருவடிகளைத் தொழுது ஆயிரம் நாமங்களையும் வாயாரச் சொல்லி, எம்பெரு மானிடம் வேருெரு பலனை விரும்பி இருந்த பழைய ஜன்மத்தை விட்டு இங்கு பல்லாண்டு பாடுவதற்கு வாருங்கள் என்று அழைக்கிறுர் ஆழ் வார்.

ஆக இம் மூன்று பாட்டுக்களில் மூன்றுவிதமான அடியார் குழாங்களைத் தம்மோடு பல்லாண்டு பாடுவதற்காக அழைத்தார். அவர்களும் மேல் வரும் மூன்று பாட்டுக்களில் ஆழ்வாருடன் சேர்ந்து மங்களாசாசனம் செய்ய இசைகிறுர்கள்.

''எந்தை தந்தை......பாடுதுமே'' என்கிற பாட்டில், வேருெரு பலனையும் விரும்பாமல் எம்பெருமானுக்கே அடிமை செய்யவேண்டும் என்று இருக்கும் அநந்ய பிரயோஜனர்கள், ஏழு தலைமுறை தொடங்கி வாழையடி வாழையாக அடிமை செய்கிறேும் என்று தங்கள் ஏற்றத்தைச் சொல்லிக் கொண்டு, நரசிம்மமூர்த்தி, சத்ருவான இரணியனை உருவழித்ததின் பேரில் ஏற்பட்ட ஆயாஸம் தீருவதற்காகவும், அன்று பல்லாண்டு பாடாத குறை திருவதற்காகவும் இன்று பல்லாண்டு பாடுவோம் என்று ஆழ்வாருடன் சேர்ந்தனர்.

''தீயில் பொலிகின்ற....கூறுதுமே'' என்கிற பாட்டால், ஆத்மானுபவத் திற்காக எம்பெருமான் ஒருவனையே நினைக்கும் கைவல்யார்த்திகள், தங்க ளுடைய நீச எணணத்தைக் கைவிட்டு, அக்னி, சூரியன் முதலியவற்றைக் காட்டிலும் மிகவும் பிரகாசமான சிவந்த ஒளியுடைய ஸ்ரீ சக்கரத்தாழ் வான் சிந்நத்தால் அடையாளம் செய் யப்பட்டவர்களாய்த் தலைமுறை தலை முறையாக அடிமை செய்வதற்காக வந்தோம் என்கிறுர்கள். மேலும் அடி யார்களின் பகைவஞன பாணுசுர னுடைய ஆயிரம் தோள்களிலிருந்து இரத்த வெள்ளம் ஓடும்படியாக சுழற்றப் பெற்ற சக்கரத்தாழ்வானை ஏந்தி நிற்கும் எம்பெருமானுக்குப் பல்லாண்டு பாடுவோம் என்று சொல்லிக் கொண்டு ஆழ்வாருடன் சேர்ந்தனர். இப்பாட்டில் '' ஆழி வல்லானுக்குப் பல்லாண்டு கூறுதுமே'' என்கிற வாக்கியத்திற்குப் பெரியவாச் சான் பிள்ளை வெகு அழகாக வியாக் யானம் செய்கிறுர். அதாவது, பாணுசுரனைக் கொல்வதற்கு அடிமை செய்த சக்கரத்தாழ்வானின வீர ஸ்ரீக்கும் அவ்வாழியை அடிமை கொண்ட கிருஷ்ணனுடைய வீரஸ்ரீக் கும் அன்று மங்களாசாசனம் பண்ணுத இழவு தீர இன்றிருந்து திருப் பல்லாண்டு பாடுகிறேும் என்கிறுர்கள்.

'' நெய்யிடை.... ........பல்லாண்டு கூறுவனே'' என்கிற பாட்டால் உயர்ந்த செல்வமான அண்டாதிபதி யாதலை விரும்பும் ஐஸ்வர்யார்த்திகள் தங்களுடைய நீசத்வத்தை எண்ணி, எம்பெருமானுடைய ப்ரஸாதத்தை யும், எப்போதும் பிரிவில்லாத சேவை யையும், அவன் கையாலே இட்ட வெற்றிலை பாக்கையும், கழுத்துககு ஆபரணமான பூஞேடு, காதுக்குக் குண்டலத்தையும், உடம்பிலே பூசத் தக்க வாசனை நிறைந்த சந்தனத் தையும் கொடுத்து எங்களை ''உண்ணும் சோறு பருகும் நீர் தின் னும் வெற்றிலை எல்லாம் கண்ணன்'' என்று சுத்த ஸ்வபாவராக ஆக்கவல்ல கருடனைக் கொடியாகவுடைய எம் பெருமானுக்குப் பல்லாண்டு கூறக்கட வோம் என்று ஆழ்வாருடன சேர் கின்றனர். இப்பாட்டில் ''பையுடை நாகப்பகைக் கொடியானுக்குப் பல்

(27-ம் பக்கம் பார்க்க)

தொடர் கட்டுரை)

# சிறையிருந்த செல்வி

பகுதி – 2

சிறையிருந்த செல்வியை-சீதையை-எண்ணிய உடனே நமக்கு முதலில் நினைவுக்கு வருவது அவளுடைய கற்பே ஆகும். கற்பினுக்கு ஓர் இலக்கணமாக வாழ்ந்தவள் சீதை. ஆனால் மணிமேகலையோ,

''மண்டிணி ஞாலத்து மழை வளந் தரூஉம்
பெண்டி ராயின் பிறர் நெஞ்சு புகாஅர்''
(சிறை செய் காதை. 45-46)

என்று கற்புக்கரசியின் இலக்கணம் செப்புகின்றது. இராவணனின் உள்ளத்திலே குடியிருந்த சீதை எங்ஙனம் கற்புக்கரசியாவாள்? என்று இவ் இலக்கணங் கொண்டு சீதையின் கற்பைக் குறை கூறுவாருமுளர். ஆனால் இதைக் காலக் கண் கொண்டு காணல் வேண்டும். மணிமேகலைக்குக் காலத்தால் மிகவும் முற்பட்டது இராமாயணம். இதனால் இவ்இலக்கணம் இராமாயணத்தை சீதையின் கற்பைக் குறைவு படுத்த இயலாது. மேலும் ஆரிய சமுதாயக் கட்டுத்திட்டங்களில் மணிமேகலையில் கூறியிருப்பது போன்று எந்தக்கட்டுப்பாடும் இருப்பதாகத் தோன்றவில்லை. வட நாகரீகத்தின்படி குறையற்றதாகத் தோன்றும் ஒன்று தமிழ் நாகரீகத்தின் படி குற்றமுள்ளதாக இருப்பின் அதற்காக வட நாகரீகத்தினைக் குறை கூறிப் பயனில்லை. இராவணன் சீதையைத் தன் உள்ளச் சிறையில் சிறைப்படுத்தினான் என்று வான்மீகர் அமைத்ததைத் தமிழ்க் கற்பினுக்கு ஒவ்வாது என்ற காரணத்தால் எவ்வாறு மாற்ற முடியும்? இராவணனின் இதயத்துள் சீதை சிறை வைக்கப் படவில்லை என்று மாற்றி யமைக்கத் தான் முடியுமா? அப்படி மாற்றினால் கதையின் போக்கு என்னாவது? ஆகவேதான், இத்தனை சிந்தனைகளுக் கிடையிலேதான், கம்பன், வேறு வழியில்லாது, கதையின் போக்கைப் பாதிக்காவண்ணம, அதே நேரத்தில் தமிழ்க் கற்பின் இலக்கணம் சிதையா வண்ணம் சீதையின் பாத்திரத்தை மிகக் கவனமாக அமைக்கிறான். சீதையின் கற்பின் திண்மையை நன்கு நிலை நாட்ட அவன் மேற் கொள்ளும் முயற்சிகளைக் காவியம் முழுவதும் காணலாம்.

முக்கியமாகச் சுந்தர காண்டத்தில், சீதையின் கற்பைப் பிறர் ஐயுறு வண்ணம் காக்க, நிலைநாட்ட, மிகவும் பாடுபடுகிறான் கம்பன். இராவணன் சீதையை நோக்கிக் காமச் சரங்களைத்

திரு. என். கிருபானந்தன்,
M.A., BSc, Jr. Dip-in-Ling,
திருப்பதி.

தொடுக்கிறான். சீதை இராவணனின் தீச்சொற்களைக் கேட்டு மிக்கு சினமும் மிகு வேதனையும் கொள்கிறாள். காமுகனைத் தன் முன் நிற்கும் இராவணனை நேராக நோக்கிப் பேசவும கூசி வெறுக்கும் அவள், இராவணன் முன் ஒரு துரும்பை எடுத்துப் போட்டு அதை நோக்கி, இராவணனிடம் கூற வேண்டிய பதில்களனைத்தையும் கூறுகிறாள். இதன் மூலம் அற்பனாக நிற்கும இராவணனை ஒரு துரும்பாக, அற்பத தூசாக மதித்தாள் சீதை என்று கம்பன் நிலைநாட்டுவான். சீதை இராவணனைப் பலவாறாகப் பழித்து, நல்வழிபடுமாறு கூறுகிறாள். இதனையெல்லாம் அசோக மரத்தின் மேலே, இலைப் புதருக்கிடையே, மறைந்து அமர்ந்திருக்கும் அனுமன் கேட்கிறான். இராவணனின் காம வார்த்தைகளுக்குச் சீதையளித்த பதில்களையும், அறிவுரைகளையும் கேட்கும் அறிவின் இலக்கணமான சொல்லின் செல்வன், சீதையைப்பற்றி என்ன எண்ணுகிறான்?

''அன்ன காலையில் அநுமனும்
அருந்ததிக் கற்பின்
என்னை யாளுடை நாயகன்
தேவியை''க்
(சுந்தர. காட்சிப் படலம்-468)

கண்டவுடன் பக்தியும், பெரு மதிப்பும் கொள்கிறான். சீதையின் உள்ளம் மாசுற்று இருப்பின், அனுமன் சீதையைக் கற்பின் கொழுந்தெனத் துணிவானா? ஆக அனைத்து வேதங்களையும் கற்ற அனுமன் வாய் மூலமாக ''அருந்ததிக் கற்பின் தேவி'' என்று அமைப்பதின் மூலம் சீதையின் குற்ற மற்ற தன்மையை-கற்பின் செம்மையைக்-கம்பன் வலியுறுத்துகிறான்.

அடுத்து, இலங்கையிலிருந்து இராமனிடம் மீண்ட அனுமன் செய்வதென்ன? இராமனைக் கண்டவுடன் அவனை வணங்கினானில்லை. இராமனின் ஆவலை, உள்ளத் துடிப்பை கவலையை உணர்ந்தவனாக, சீதையிருக்கும் தென் திசை நோக்கித் திரும்பி, உச்சி மீது குவித்த கையனாய், நிலத்தில் மார்பகம் பொருந்த விழுந்து வணங்குகிறான். இதன் மூலமாகச் சீதை உயிருடன், தென் திசையில், கற்பு நலம் சிறிதும் குன்றாது உள்ளாள் என்பதைச் குறிப்பாக, விரைவாக உணர்த்துகிறான் அஞ்சனை மைந்தன். அம்மட்டுமா? இராமனின் உள்ளத்தே எழும் கேள்வி அலைகளை ஊகிக்கும் சொல்லின் செல்வன்,

''கண்டெனென் கற்பினுக் கணியைக்
கண்களால்''

என்று மிகவும் சுருக்கமாகப் பல செய்திகளைக் கூறிவிடுகிறான். ''ராமா! கற்பினுக்கு அணியான சீதையை நான் உயிருடன் கண்டேன். கற்புச் செல்வியின் சிறப்பைப் பிறர் கூறக் கேட்டு வந்து கூறவில்லை. நானே அவள் கற்புத் திண்மையை நேரில், என் இரண்டு கண்களால்

கண்டேன். அவள் இராவணனிடம் உரைத்த பதிலையும், அவள் இருந்த சோக நிலையையும் கண்டேன்'' என்னும் இத்தனை கருத்துக்களையும் வெகு சுருக்கமாக அனுமன் வாய் மொழி மூலமாகச் கம்பன் அமைக்கிறான்.

அம்மட்டுமா ? உடனேயே அனுமன், இராமனிடம் இலங்கையில் சீதையைக் காணவில்லை என்று புதிர் போடுவான்.

''ராமா ! சீதையை நான் இலங்கையில் காணவே இல்லையே. சீதை இலங்கையில் இல்லை. நான் இலங்கையில் சீதையைக் கண்டேன் என்பது பொய். நான், அங்கு உயர் குடிப் பிறப்பு என்று சொல்லப்படுவது ஒன்றும், பெரும் பொறுமை என்பது ஒன்றும், கற்பு என்னும் பெயரையுடையது ஒன்றும் சேர்ந்து ஒன்றாய்க் களிப்போடு நடனமாடப் பார்த்தேனே ஒழிய, சீதையை நான் காணவேயில்லை'' என்பான். இந்தக் கருத்து அமைந்த அழகான பாடல்:

''விற்பெருந் தடந்தோள் வீர! வீங்கு
நீர் இலங்கை வெற்பில்
நற்பெருந் தவத்தால் ஆய
நங்கையைக கண்டேன் அல்லேன்
இற்பிறப்பு என்பது ஒனறும் இரும்
பொறை என்பது ஒன்றும்
கற்பு எனும் பெயரது ஒன்றும் களி
நடம் புரியக் கண்டேன்''

(சுந்தர. திருவடி தொழுத படலம்-29)

இவ்வாறு அமைப்பதன் மூலம் கம்பன் சீதையின் கற்பின் மாசற்ற தன்மையை வலியுறுத்துகிறான்.

இவ்வளவு கூறியும் கம்பனுக்கு அமைதி ஏற்படுவதில்லை. சீதையின் கற்பை நன்கு வெளிபடுத்த வேண்டுமே என்ற எண்ணத்துடன், பிறர் அவள் கற்பை ஐயுற்றுவிடக் கூடாதே என்ற கலக்கத்துடன், காவியத்தின் பிற்பாகத்தும், பல இடங்களில் சீதையினைப் பற்றிக் கூறுமிடமெல்லாம் அவளின் கற்புச் சிறப்பையே பன்னிப் பன்னிப் பேசுகிறான். ஒன்பது மாதங்களுக்குப் பிறகு, இராவணனின் அழிவுக்குப் பிறகு இராமன் சீதையைச் சந்திக்கிறான். அவன் சீதையை நோக்கியதைக் கம்பன்,

''கற்பினுக் கரசினைப் பெண்மைக்
காப்பினைப
பொற்பினுக் கழகினைப் புகழின்
வாழ்க்கையைப்
தற்புரிந் தருள்புரி தருமம்
போலியை
அறபினத் தலைவனு மமைய
நோககினான்''

(யுத்த காண்டம். மீட்சிப்படலம்-60)

என்று கூறுவான். இங்கும் இராமன் சீதையைக் காணவில்லை. கற்பின் தலைவியைக் கண்டான் என்று அமைப்பதன் மூலமும் சீதையின் கற்ட மாசற்றது என்பதை வலியுறுத்துகிறான் கம்பன்.

இதைப் போன்றே பல இடங்களில் சீதையின் கற்பு நலனை வலியுறுத்தும் முகத்தான் கம்பன், கதையின் போக்கை மாற்ற இயலாத காரணத்தால், வேறு பல வகைகளில் முயல்கிறான். சீதையின் கற்பினுக்குச் களங்க பிறர் கற்பிக்கக் கூடாதே



# பகவத் தத்துவம்

ஆதிபகவன், வாலறிவன், மலர் மிசை ஏகினன், வேண்டுதல் வேண்டாமை இலான், பொறிவாயில் ஐந்த வித்தான், தனக்குவமை இல்லாதான், அறவாழி அந்தணன், எண் குணத்தான் என இறைவனைப் பலவாறாக விளக்குகிறார் வள்ளுவர் பெருமான். அவன் உருவம் இன்னது என்றும், அவனது பெயர் இன்னது என்பதையும் அவர் குறிப்பிடுவதில்லை. ''அகந்தமஸ் பர்ஸம்'' என்று வேதங்கள் கூறுகின்றன. நாமம், ரூபம், (உருவம்) ரஸம், கந்தம் அவனுக்கு இல்லை. ''ஒரு நாமம், ஓர் உருவம் ஒன்றுமில்லாற்கு ஆயிரம் திருநாமம் கூறி நாம் தெள்ளேணங் கொட்டாமோ?'' என்று மாணிக்கவாசகப் பெருமானாலும் விளக்கப்படுகிறது.

பகவான் என்பதற்கு தைரியமுடையவன் என்றும், சிறந்த அறிவாற்றலுடையவன் என்றும் கீழ் வரும் ஸ்லோகம் நமக்கு விளக்குகிறது.

''ஐஸ்வர்யஸ்ய ஸமக்ரஸ்ய ஞானஸ்ய யஸஸ்ரியஃ
ஞான விக்ஞான யோ வைசக்வ ஷண்ணாம் பக இதிரிதம்''

'ஆதியும் அந்தமும் இல்லா அருட் பெரும் சோதி'யாகிய அவ்விறைவன், ஆகாயமாகவும், பூமியாகவும், காற்றாகவும், தீ ஆகவும், உடம்பாகவும், அவ்வுடம்பிலுள்ள உயிராகவும், உள்ளணுவுமாகவும், இல்லாதவனுமாகி, 'நான்' 'என்னுடையது' என்று சொல்லி அவரவர்களை ஆட்டிவைப்பவனாகவும் உளன் என்கிறார் வாதவூரடிகள். இதோ அப்பாடல்.

''வானாகி மண்ணாகி, வளியாகி ஒளியாகி
ஊனாகி உயிராகி உண்மையுமாய் இன்மையுமாய்க்
கோனாகி யான் எனது என்று அவர் அவரைக் கூத்தாட்டு
வான ஆகி நின்றாயை என் சொல்லி வாழ்த்துவனே''

நம்மாழ்வார் திருவாய்மொழியும் இதனையே வலியுறுத்துகிறது

''நீராய் நிலனாய் தீயாய்க் காலாய் நெடுவானாய்
சீரார் சுடர்களிரண்டாய்ச் சிவனாய் அயனானாய்
கூராராழி வெண் சங்கேந்திக் கொடியேனபால்
வாராய் ஒரு நாள் மண்ணும் விண்ணும் மகிழவே''

இவ்வாறு பஞ்ச பூதங்களாக உள்ள இறைவன் 'அங்கிங் கெனாதபடி எங்கும் பிரகாசமாய்' நீக்கமற நிறைந்துள்ளான்'. அவன் கருணையே நிறைந்து, எல்லா உயிர்களாகவும் அவ்வெல்லா உயிர்களின் ஒளியாகவும், ஞானிகளால் அறியப்படும் மெய்ஞ் ஞானமாகவும், தனக்குவமை இல்லாதவனாகவும், சச்சிதானந்தமாகவும் விளங்குகிறான்.

உலக நிலை முழுதாகி ஆங்காங்குள்ள
உயிராகி உயிர்க்குயிராம் ஒளி தானாகிக்
கலக நிலை அறியாத காட்சியாகிக்
கதியாகி மெய்ஞ்ஞானக் கண்ண தாகி
இலகு சிதா காசமதாய்ப் பரமா காச
இயல்பாகி இணை யொன்றும் இல்லாதாகி
அலகில் அறிவானந்தமாகிச் சச்சி
தானந்த மயமாகி அமர்ந்த தேவே
—திருவருட்பா.

மேலும் அவனே எல்லாவற்றிற்கும் விதையாக உள்ளவன்; விளைவிக்கும் பொருளும் அவனே; விளையும் முளையும் அவனே; அவ்விளைவின் பயனும் அவனே; அப்பயனைப் பெறுவோனும் அவனே; குறைவாகவும், நிறைவாகவும், குறைவிலாத சத்தாகி, சித்தாகி, இன்பமாகி, அழியாத்தன்மை பெற்றும் எவ்வுயிர்க்கும் சாட்சியாக இருப்பவனும் அவனே. இதனை வள்ளலார் மிக அழகாகப் பாடுகிறார்.

வித்தாகி முளையாகி விளைவ தாகி
விளைவிக்கும் பொருளாகி மேலும் மாகிக்
கொத்தாகிப் பயனாகிக் கொள் வோனாகிக்
குறைவாகி நிறைவாகி குறைவிலாத
சத்தாகிச் சித்தாகி இன்பமாகிச்
சதா நிலையாய எவ்வுயிர்க்குஞ் சாக்ஷியாகி
முத்தாகி மாணிக்க மாகித் தெய்வ முழு
வயிரத் தனிமணியாய் முளைத்த தேவே.

அவனே பரம்பொருள். அப்பரம் பொருள் ஆணல்ல; பெண்ணல்ல; அலியுமல்ல. அவனைக் கண்ணால் காணவும் இயலாது. தன்னை வந்து அடையாதவற்கு அவன் இல்லாதவனே, தன்னிடம் அன்போடு வந்தடைந்தவற்கு என்றும் எங்கும் உள்ளவன். தன்னைப் பேண வேண்டும்போது அவர்கள் வேண்டிய வடிவோடு வந்து பிறப்பான். அவனிடம் அன்பில்லாதவற்கு மிகவும் அரிதானவன். நம்மாழ்வாரின் திருவாய்மொழி இதனை நமக்கு விளக்குகிறது.

திரு. பி. பாலசுப்பிரமணியம்
சித்தூர்.

ஆணல்லன் பெண்ணல்லன் அல்லா அலியுமல்லன்
காணலும் ஆகான் உளனல்லன் இல்லையல்லன்
பேணுங்காற் பேணும் உருவாகும் அல்லனுமாம்
கோனை பெரிதுடைத்து எம் பெம்மானைக் கூறுதலே!

அவ்விறைவன் ஊனக் கண்களுக்குத் தென்படமாட்டான். எல்லா உயிர்களையும் தோற்றுவித்த அன்னையாகவும், தந்தையாகவும் இருந்து காப்பவன். நாம் செய்யும் காரியங்களுக்கெல்லாம் துணையாக இருப்பவன். எங்கும் நீக்கமற நிறைந்திருக்கும் அப்பரம் பொருளை ஒரு குறிப்பிட்ட தூரத்தை மட்டுமோ அல்லது சில

குறிப்பிட்ட பொருள்களை மட்டுமே பார்க்கக் கூடிய நிலையிலுள்ள இவ் ஊனக் கண்களினால் காண முடியாது. எனவேதான் நம் முன்னோர்கள் அவனை 'தோன்றாத் துணை' என்றனர்.

ஈன்றாளுமாய் எனக்கெந்தையு
மாயுடன் தோன்றினராய்
மூன்றாயுலகம் படைத்துகந் தான்
மனத்துள்ளிருக்க
ஏன்றான் இமையவர்க் கன்பன்
திருப்பாதிரிப் புலியூர்த்
தோன்றாத் துணையா யிருந்தனன்
தன் அடியோங்களுக்கே.

—அப்பர் பெருமான்.

ஸ்ரீ தட்சிணாமூர்த்தி சுவாமி-காளஹஸ்தி.

திரு. S V.K.S. ஸ்ரீநிவாசன், திருப்பதி.



தோன்றாத் துணையாக இருக்கும் அவ் இறைவனை நம் கண்களால்தான் காண முடியாது. சரி. அவனை எவ்வாறு அறிவது ?

விறகு இருக்கிறது. ஆனால் நம் கண்ணுக்கு மரக்கட்டை மட்டுமே புலப்படுகிறது. நெருப்புக் குச்சி கண்டுபிடிக்கு முன் நெருப்பே இல்லா மலா போய்விட்டது? நெருப்பு இருந் தது: அம்மரத்திலேயே இருந்தது. அவ்விறகைக் கடைந்து கடைந்து நெருப்பை வெளிப்படுத்தினார்கள்; இவ்வாறு கடைந்து வெளிப்படுத்திய பின் நமக்கு விளங்குகிறது. அதனால் விறகில் நெருப்பு இல்லை எனல் அறி யாமையன்றோ? நம் கண்களுக்குப் புலனாகாவிட்டாலும், விறகில்நெருப்பு இருப்பதை நம்மால் மறுக்க இய லுமா? அதுபோன்றே பால் இருக் கிறது; நெய் இருக்கிறது. இந்நெய் எங்கிருந்து வந்தது? பாலிலிருந்து தானே? கடவுள் பேரொளியாக இருப்பவன். அவனைக் காண அன்பும் அறிவும் கொண்டு முயற்சி செய்தல் வேண்டும். கட்டையைக் கடையாமல் நெருப்பைப் பெற முடியாது. பாலி லிருந்து பெறும் தயிரைக் கடையாது நெய்யைப் பெற இயலாது. தயிரைக் கடைய மத்தும், கயிறும் வேண்டும். இதுபோன்றே அன்பாகிய மத்தும், ஞானமாகிய கயிறும் இறைவனைக் காண அவசியம் வேண்டும். அன்பு அல்லது பக்தியாகிய மத்தைக் கொண் டும், அறிவு அல்லது ஞானமாகிய கயிற்றைக் கொண்டும் கடைந்தால் இறைவன் தானே தோன்றுவான்.

விறகில் தீயினன்; பாலிற்படு நெய்
போல்
மறைய நின்றுளன்: மாமணிச் சோதி
யான்
உறவு கோல் நட்டு உணர்வு
கயிற்றினால்
முறுக வாங்கிக் கடைய முன் நிற்குமே

—அப்பர் பெருமான்.

இறைவனைக் கடவுள் என்றும் அழைப் போம் நாம். கட + உள் என்று பொருள் கொள்ளும்போது எல்லா

வற்றிற்கும் அப்பாலாய் விளங்குவது என்ற பொருள் தோன்றுகிறது. கட என்பது தாண்டு என்றுகிறது. 'உள்' என்பது தொழிற் பெயர் இறுதியாகிய விகுதியாகும். மனம் மொழிக்கு எட்டாதவன் கடவுள். அவன் எல்லா வற்றையும் கடந்தவன். இதனை வள்ளலார் பின் வருமாறு பாடிப்பரவு கிறார்.

அளவையெலாங் கடந்து மனங்கடந்து மற்றை
அறிவை யெலாங் கடந்து கடந்து அமல யோகர்
உளவை யெலாங் கடந்து பதங் கடந்து மேலே
ஒன்று கடந்து இரண்டு கடந்து உணரச் சூழ்ந்த
களவை யெலாங் கடந்து அண்ட பிண்ட மெல்லாங்
கடந்து நிறைவான சுகக் கடலே அன்பர்
வளவை யெலாம் இருளகற்றும் ஒளியே மோன
வாழ்வே என் உயிர்க்குயிராய் வதியுந்தேவே.

இவ்வாறு நாதத்தை யெல்லாம் கடந்து அண்டங்களை யெல்லாம் கடந்து மனம் மொழி இவைகளுக்கு எட்டாததாய், அப்பாலாய் அப்பா லுக்கு அப்பாலாய் எங்கும் நீக்கமற நிறைந்து இருக்க கூடிய இறைவனே 'நான்' எனப்படும் ஆத்மா. இதனை எவ்வாறு அறிவது? எவனது உள்ளத் தில் 'நான், எனது' என்னும் ஆண வம் அழிந்து எல்லாம் ஈஸ்வர மயமாக்க காண்கிறானே — அங்கேதான் இறை வனைப்பற்றி அறியமுடியும். வார்த்தை களுக்கு அப்பாற்பட்டவன்: எனவே சலனமற்ற மௌனமான மனதில் இறைவனுகிய ஆத்மா ஒளிவிடுகிறது.

நாதமுங் கடந்து நிறைந்து நின் மயமே நான்
என அறிந்து நான்றானும்
பேதமும் கடந்த மௌன ராச்சி யத்தைப்
பேதையேன் பிடிப்ப தெந் நாளோ?

—திருவருட்பா

ஒளி பொருந்திய ஆத்மாவாகிய ஆண்டவனைக் காண சலனமற்ற உறுதி யான மனம் வேண்டும். இதனை மன திற் கொண்டே பாரதியும் 'உறுதி கொண்ட நெஞ்சினாய் வா வா வா' என்றான். பல பொருள்களைப்பற்றிச் சிந்திப்பதால் மனம் தன்னுடைய ஒரு மைப்பாட்டை இழந்து சஞ்சலத்திற்கு அடிமையாகிறது. அம்மனத்தைக் கட்டுவதென்பது இயலாது என உணர்ந்து பார்த்தன் பின் வருமாறு கூறுகிறான்.

''சஞ்சலம் ஹி மன: க்ருஷ்ண ப்ரமாதி பலவத் த்ருடம்
தஸ் யாஹம் நிக்ரஹம் மன்யே வாயோரிவ ஸுதுஷ்கரம்''

'க்ருஷ்ண' மனம் அலையும் தன்மை யுடையது. கலக்க முடையது. வலி வுடையது. காற்றைப்போன்று அடங் காதது. அதனை அடக்க இயலாது என்றே நான் நினைக்கிறேன்'.

ஓயாது அலைந்து திரிவதால் 'சஞ் சலம்' எனப்படுகிறது. துக்கங்களி னுல் கலக்கமுறுவதால் 'ப்ரமாதி' எனப்படுகிறது. மிகவும் வலிமை வாய்க்கப் பெற்றதனுல் 'பலவத்'

(24-ம் பக்கம் பார்க்க)

## 'க்யூ' கொட்டகைகளில் யாத்திரிகர்களுக்கான வசதிகள்

உட்கூரைகளில் பொருத்தப்பட்ட மின்சார விசிறிகள் மட்டுமின்றி, காற்றோட்ட மிக்க விசாலமான சுகாதாரத்துடன் கூடிய பெரிய 'க்யூ' அறைகள்

காபி போர்டு நிறுவனத்தாரால் அறைகளுக்குள் உணவு விற்பனை செய்யப் படல்

நியாயமான விலைகளில் உணவுப் பொட்டலங்கள் கிடைக்கப் பெறல்

சுத்தமான பால் ஆந்திர மாநில பால்வள நிறுவனத்தாரால் விற்பனை செய் யப்படல்.

தி.தி. தேவஸ்தானத்தாரின் இறைவனின் திருவுருவப்படங்கள், வெளியீடு கள் விற்பனை செய்யப்படல்;

'க்யூ' வரிசைகளில் கூட 'ஒதுங்கு (TOILET) வசதிகள்;

குறிப்பிட்ட எல்லைக்குள் திரையிடப்படும் தொலைக்காட்சி நிகழ்ச்சிகள்.

பக்தி நிகழ்ச்சிகளும், இசையும் ஒலிப்பரப்பப்படல்.

தேர்ந்த மருத்துவரின் கீழ் ஒரு வைத்திய சாலை.

'க்யூ' வில் தங்களுடைய சாமான்களை யாத்திரிகர்கள் சுமந்து செல்வதைத் தவிர்க்க உதவும வகையில் சாமான்களை வைத்துச் செல்வதற்காக இலவச அறை வசதிகள். 'க்யூ' அறைகளின் முன், காலணிகளை விட்டுச் செல்வ தற்கான வசதிகள்.

தலாளிகள், ஏமாற்றுப் பேர்வழிகள் போன்றோரின் தவறுன நடவடிக்கை களைத் தடுக்கவும், புகார்களை ஏற்றுக்கொண்டு அதற்குரிய நடவடிக்கைகளை மேற்கொள்ளவும் 'பெயிஷ்கார்' நிலைப்பிரிவில் ஓர் அலுவலர் கோயிலுக்கு முன்-முகத்துவாரம் அருகே-நியமிக்கப்பட்டுள்ளார்.

'க்யூ' கொட்டகைகளில் இருக்கும் யாத்திரிகர்களின் சௌகர்யங்களை கவனிக்க வும், வசதிகளை மேற்கொள்ளவும் 'பெயிஷ்கார்' நிலைப்பிரிவில் ஓர் அலுவலர் நியமிக்கப்பட்டுள்ளார்.

# பரிபாடலில் திருமாலிருஞ்சோலை

கடைச்சங்க காலத்தில் எழுந்த நூல்களைப் பண்டைய இலக்கிய அறிஞர்கள் பாட்டு, தொகை எனப் பாகுபாடு செய்துள்ளனர். அவை பத்துப் பாட்டும் எட்டுத் தொகையும் ஆகும்.

நற்றிணை நலல குறுநதொகை
ஐங்குறுநூறு
ஒத்த பதிற்றுப்பத்து ஓங்கு பரிபாடல்
கறறறிந்தார் ஏத்தும் கலியொடு
அகமபுறமென்(று)
இத்திறத்த எட்டுத் தொகை.

—எனப் பழைய பாடல் ஒன்று எட்டுத் தொகை நூல்கள் இன்னின்ன வென்று கூறுகிறது. அடி வரையறை, பொருட்சிறப்பு, பாவகை இவற்றைக் கொண்டே இந்நூல்களுக்கு இப்பெயரிட்டுள்ளனர்.

இவற்றுள் பரிபாடல் என்னும் இசைப்பாக்களால் தொகுக்கப் பெற்ற நூல் பரிபாடல் எனப்பெயர் பெற்றது. இச்செய்யுட்களுக்குப் பண்கள் வகுக்கப்பட்டுள்ளன. இவை இசையுடன் பாடப்பட்டதாக அறிகிறோம். 'பரிபாடல் தொகை நிலை வகையால் பா என்று சொல்லப்படும் இலக்கணம் இன்றி எல்லாம் பாவிற்குப் பொதுவாக நிற்பதற்கு உரியதாய் இன்பப் பொருளைப் பற்றிக் கூறும். சிறுமை இருபத்தைந்து அடியும் பெருமை நானூறு அடியும் பெற்று வரும்' என்று தொல்காப்பியர் பரிபாடலுக்கு இலக்கணம் கூறியுள்ளார். இளம் பூரணர் பரிபாடலில் மலையும் யாறும் வருணிக்கப்படும் என்று கூறியுள்ளார். உறுதிப் பொருள்கள் நான்கனுள் இன்பத்தையே பொருளாகக்கொண்டு கடவுள் வாழ்த்து முதலியவற்றில் பரிபாடல் வரும் என்று பேராசிரியரும், 'கடவுள் வாழ்த்து உள்ளிட்ட காமப் பொருள் குறித்து உலகியலைப்பற்றி வரும்' என்று நச்சினார்க்கினியரும் கூறியுள்ளனர்.

நால்வகைப் பாவிற்கும் பொதுவாய் வெண்பா வழியாகப் பிறந்தது பரிபாடல். பரிபாடல் பல உறுப்புக்களைப் பெற்று வரும். அவை கொச்சகம், அராகம், எருத்து, சொற்சீரடி, முடுகியலடி என்பன. எருத்து என்பதற்கு மற்றொரு பெயர் தரவு என்பது.

இன்று நமக்குக் கிடைத்துள்ள பரிபாடல் தொல்காப்பியர் விதிக்கு மாறானது. இதனுள் பல பாடல்கள் திருமாலையும் முருகனையும்பற்றியவை. முருகனைப்பற்றிய பாடல்கள் சிலவும் வையை பற்றிய பாடல்களும் அகப் பொருள் பற்றியவை. எனவே அகம் புறம் இரண்டும் இன்றுள்ள பரிபாடலில் இடம் பெற்றுள்ளன. பரிபாடலில் அடியின் சிறுமை 25 அடியும் பெருமை 400 அடியும் எனத் தொல்காப்பியர் வகுத்துள்ளார். ஆனால் இன்று நமக்குக் கிடைத்துள்ள பரிபாடலில் அடியின் சிறுமை 35 ஆகவும் பெருமை 140 ஆகவும் உள்ளது. கடைச்சங்க காலத்தில் பாடப்பட்ட பரிபாடல்களின் எண்ணிக்கை 70 எனத் தெரிய வருகிறது. ஆனால் நமக்குக் கிடைத்துள்ளவை 22 மட்டுமே. திருமாலைப் பற்றியவை 6; முருகனைப் பற்றியவை 8; வையை ஆற்றைப் பற்றியவை 8; 13 பேர் இவற்றைப் பாடியுள்ளனர். வருணனைமிக்க எளிய நடையில் இப்பாடல்கள் அமைந்துள்ளன. ஒவ்வொன்றிற்கும் இசை அமைக்கப்பட்டுள்ளது.

புலவர் எம். ஜனகவல்லி,
ஸாஹித்யரத்ன,
சென்னை - 44.

பாண்டியர்களைப் பற்றியும் அவர்களுடைய நாட்டைப் பற்றியும் குறிப்புக்கள் இப்பாடல்களில் காணப்படுகின்றன. வையையாறு, மதுரை நகரம், திருப்பரங்குன்றம், திருமாலிருஞ்சோலை பற்றிய செய்திகள் காணப்படுவதால் இவை பாண்டிய நாட்டைச் சிறப்பிக்கப் பாடப்பட்டனவாதல் வேண்டும்.

திருமால் பற்றிய 8 பாடல்களுள் 'சிலம்பாறணிந்த சீர்கெழு திருவிற் சோலையொடு தொடர்மொழி மாலிருங்குன்றத்தையும் அங்கு கோயில் கொண்டுள்ள திருமாலையும் புகழ்ந்து பாடும் (15-ஆம் பாடல்) பாடலைக் காண்போம்.

புலவரை அறியாப் புகழொடு பொலிந்து
நிலவரை தாங்கிய நிலைமையிற் பெயராத்
தொலையா நேமி முதல் தொல்லிசை
யமையும்
புலவராய் புரைத்த புனை நெடுங்குன்றம்
பலவெனின் ஆங்கவை பலவே பலவினும்
நிலவரை யாற்றி நிறைபயன் ஒருங்குடன
நின்று பெற நிகழுங் குன்றவை சிலவே
சிலவினுஞ்சிறந்தன தெய்வம்பெட்புறும்
மலரகன் மார்பின் மைபடி குடுமிய
குலவரை சிலவே குலவரை சிலவினும்
சிறந்தது கல்லறை கடலுங் கானலும்
போலவும்
புல்லிய சொலலும் பொருளும் போலவும்
எல்லாம வேறு வேறுருவின் ஒரு
தொழில் இருவாத்
தாங்கு நீணிலை யோங்கிருங்குன்றம்.

'புலவரை' என்று துவங்கும் இப் பாடலின் முதல் பதின்மூன்று அடிகளில் மாலிருங் குன்றத்தின் பெருமையைப் பேசத்துவங்கி, சக்கரவாளம் முதலாக நல்லிசைப் புலவர் பலர் ஆராய்ந்து கூறிய நெடிய மலைகள் சிறப்பு வகையாலன்றிப் பொதுவகையால் பல உள்ளன என்று கூறப்படும். அவற்றுள் இந்நில வுலகத்துள்ள மக்களின் பசிவெப்பத்தை அகற்றி மேலும் பொன், மணி, மரம் முதலிய நிறைந்த பயன்களை எப்போதும் மக்கள் பெறுமாறு பயன்படாநின்ற மலைகள் சிலவே யாகும். அச்சில மலைகளுள்ளும் தெய்வம் தாமே விரும்பும் மலரையுடைய அகன்ற தடங்களுடனே மேகங்கள் படியும் சிகரங்களையுடைய குலமலைகள் சிலவே சிறந்து விளங்குவன. அக்குல வரை சிலவற்றுள்ளும் கல்லென முழங்கும் கடலும் அக்கடற்கரைப் பரப்பும்

நிறம் வேறுபடுவது போல வெவ்வேறு கிய கருமையும் வெண்மையும் ஆகிய நிறத்தையும், பிரிவில்லாத சொல்லும் பொருளும் போலத் தம்முள் வேறுபடாத தொழிலினையும் உடைய எல்லாப் பொருளும் தாமேயான மாயோனும் பலதேவனும் ஆகிய இருவரையும் தாங்கா நின்ற நீண்ட புகழால் உயர்ந்த இருங்குன்றம் சிறந்தது ஆகும் என்பார் மேலும் கூறுவார்.

நாறிணர்த் துழாயோன் லகின அல்லதை
ஏறுதல் எளிதோ வீறு பெறுதுறக்கம்
அரிதிற பெறுதுறக்க மாலிருங்குன்றம்
எளிதிற் பெறலுரிமை ஒத்துகஞ் சிலம்ப
அராவணர் கயந்தலைத் தம்முன் மார்பின்
மராமலர்த்தாரின் மாண்வரத் தோன்றி
அலங்குமருவி ஆர்த்திமிழ பிழியச்
சிலம்பாறணிந்த சீர்கெழு திருவிற்
சோலையொடு தொடர் மொழி
மாலிருஙகுன்றம்

மணங்கமழ் துளசி மாலையை அணிந்த எம்பெருமான அருள் செய்த விடத்து அன்றி அருள் செய்யா விடத்து உயிர்கள் தம் முயற்சியாலே மேனிலையுலகைப் பெறுதல் என்பது இயல்வதன்று. அங்ஙனம் பெறற்கரிய மேனிலையுலகினை எளிதாகப் பெறுதற்கு உரிமை நல்கும்சிறப்பை உடைய திருமாலிருங்குன்றத்தை உலகோர் அனைவரும் கேட்கும்படி ஏத்தித் தொழக் கடவேம். ஆயிரந் தலைகளையுடைய ஆதிசேடனின் அவதாரமாகிய நம்பி மூத்தபிரானுடைய திருமார்பின் கண் அணியப்பட்ட நாலுகின்ற வெண்கடம்பின் மாலைபோலத் தன் அருவி மிக ஆரவாரித்து இழிதலால் சிலம்பாற்றை அழகு செய்த திருமாலிருஞ்சோலைமலை.

தாம் வீழ் காமம் வித்துபு விளைக்கும்
நாமத் தன்மை நன்கனம் படியெழ
யாமத் தன்மையிவ் வையிருங்குன்றத்து
மண் புனல் இளவெயில் வளாவிருள்
வளாவவெனப்
பொன் புனை உடுக்கையோன்
புணர்ந்தமர் நிலையே நினைமின்.

இந்நிலவுலகின் கண் மகளிரும் மைந்தரு பரஸ்பரம் விரும்புவதற்குக் காரணமான காமத்தை விதைத்து அதன் பயனை விளைக்கும் கூதிர்யாமத்தைத் தனக்கு இயல்பாகவுள்ள இந்த இருங்குன்றத்தின கண்ணே இளவெயில் தன்னைச் சூழ அதனிடையே இருள் உள்ள தலைபோப்ப பொன்னுடையினை அணிந்து திகழும் மாயோன் நம்பி மூத்தபிரானோடு கூடி அமர்ந்திருக்கும் திருக்கோலத்தை பார்த்தீர்களே! நீவீர் நினைமின்கள்.

......மாநந்நி கேணியின கமழுசீர்
சுனையெலா நீலமலரச சுனை சூழ்
சினையெலாஞ செயலை மலரக காயகனி
உறழ நனைவேங்கை ஒள்ளிணர் மலர
மாயோனொத்த இனனிலைத்தே
சென்றுதொழுகல்லிர் கண்டுபணிமின்மே

இனி அத்திருமாலிருஞ் சோலைமலையினது சிறப்பினைக் கேண்மின்! அம்மலைக்கண் உள்ள சுனைகளில் நறுமணங்கமழும் நீலோற் பலம் மலர்ந்திருக்க, அச் சுனையைச் சுற்றிநிற்கும் அசோகாமரத்தின் கிளைகள் எல்லாம் மலர்தலாலும் ஆங்குள்ளகாய்களும் பழங்களும் நிறம் மாறுபட வேங்கை மரத்தில் அரும்புகள் மலர்தலாலும் அம்மலை தானே திருமாலை ஒத்த தோற்றம் பெற்று விளங்கும் திருமாலிருஞ்சோலைமலை என்றுபெயர் பெறும். அம்மலை தன்னைக் கண்ட மாத்திரத்தில் காண்பவர் தம் மயக்கத்தைப் போக்கவல்லது. அம்மலைக்குச் சென்று அங்கு எழுந்தருளியிருக்கும் திருமாலை நேரில் வழிபட முடியாவிடில் நீவிர் நும இருப்பிடத்தில் இருந்தவாறே நெடுந்தூரம் தோன்றும் அம்மலையையேனும் கண்டு வணங்குமின்.

மகமுயங்கு மந்தி வரை வரை பாய
முகிழ்மயங்கு முல்லை முறை நிகழ்வுகாட்ட
மணி மருணன்னிர்ச்சினைமடமயில்அகவக்
குருகிலை உதிரக் குயிலினம் கூவப்
பகா குழல பாண்டில் இயம்ப அகவுநர்
நாநவில் பாடல முழவெதிர்ந்தன்ன
சிலம்பிற சிலம்பிசை ஓவாதொன்றுக்
கடந்தட்டான் கேழிருங்குன்று.

குட்டியாலே தழுவப்பட்ட குரங்கு ஒரு சிகரத்தினின்றும் மற்றொரு சிக

(24-ம் பக்கம் பார்க்க)

## கண்ணன் பெயரைச் சொல்லுங்கள்

திரு. க. அ. பிரகாசம்—கொடுமுடி.

உள்ளக் கோயிலுள் செல்லுங்கள்
உண்மையை ஏந்தி நில்லுங்கள்
கள்ளப் புலன்களை வெல்லுங்கள்
கண்ணன் பெயரைச் சொல்லுங்கள்—(உள்)

இன்னல் நீக்கும் துணையாவான்—கண்ணன்
இன்பம் தேக்கும் அணையாவான்
தன்னலப பிணிக்கு மருந்தாவான்—கண்ணன்
தண்ணருள் என்னும் விருந்தாவான்!—(உள்)

தியான மென்னும் சிமையிலே—கண்ணன்
திகழும் அருளர சாட்சியிலே
நியாயம் பிறந்திடும் மாட்சியிலே—கண்ணன்
நிறைந்திடு வானகக் காட்சியிலே—(உள்)

புறத்தினில பேணும் பல வழியே—கணணன்
புகும்அகம் காணும் ஒரு வழியே
அறத்தினில் வந்திடும் செவ்வழியே—கண்ணன்
அருளைத் தந்திடும் அவ்வழியே!—(உள்)




திருமலை திருப்பதி தேவஸ்தானம்

## ஸ்ரீ வேங்கடேஸ்வர ஸ்வாமி கோயில், திருமலை.

# ஆர்ஜிதக் கட்டண விவரங்கள்

ஹாரத்தி (ஒவ்வொன்றுக்கும்)கட்டணம் ரூ. 1

### ஸேவைகள் (ஸேவிப்பது மாத்திரம்)

| | | |
|---|---|---|
| சிறப்பு தரிசனம் | ரூ. | 25 |

### கைங்கர்யங்கள் (செய்து வைப்பது)

| | | |
|---|---|---|
| ஆமந்த்ரணோத்ஸவம் | ,, | 200 |
| பூலங்கி ஸேவை | ,, | 60 |
| திருமஞ்சனம் | ,, | 450 |
| கம்பூராக் கிண்ணி | ,, | 250 |
| புனுகுசட்டம் கிண்ணி | ,, | 100 |
| கஸ்தூரிக் கிண்ணி | ,, | 100 |
| ஜாபாராக் கிண்ணி | ,, | 100 |
| ஸஹஸ்ர கலஸாபிஷேகம் | ,, | 2500 |
| திருப்பாவாடை | ,, | 5000 |
| கோயிலாழ்வார் திருமஞ்சனம் | ,, | 1745 |

### உத்ஸவக் கட்டணங்கள்

| | | |
|---|---|---|
| வஸந்தோத்ஸவம் | ,, | 2500 |
| பிரம்மோத்ஸவம் | ,, | 750 |
| கல்யாண உத்ஸவம் | ,, | 1000 |
| ஊஞ்சல் சேவை | ,, | 1000 |
| தெப்போற்சவம் | ,, | 1500 |

### வாஹனங்கள்

| | | |
|---|---|---|
| ஸர்வபூபாலம் வஜ்ரகவச சேவை 72+1 (ஹாரத்தி) | ,, | 73 |
| ஸர்வபூபாலம், கல்பவ்ருக்ஷம், பெரிய சேஷவாஹனம் ஸூர்யப்ரபை, புஷ்பரதம், முத்துப்பந்தல், தங்ககருடவாஹனம் தனித்தனி 62+1 (ஹாரத்தி) | ரூ. | 63 |
| வெள்ளி கருடவாஹனம், ஹனுமந்த வாஹனம், சின்ன சேஷவாஹனம், குதிரை வாஹனம், ஸிம்ஹவாஹனம், ஹம்ஸ வாஹனம், சந்திரபிரபை, யானை வாஹனம் தனித்தனி 32+1 (ஹாரத்தி) | ,, | 33 |

### பிரஸாதங்கள் (கால் சோலா தளிகை ஒன்றுக்கு)

| | | |
|---|---|---|
| தத்யோதனம் | ,, | 40 |
| புளிஹோரை | ,, | 50 |
| பொங்கல் | ,, | 55 |
| சர்க்கரைப் பொங்கல் | ,, | 65 |
| ஸாகர்பாத் | ,, | 80 |
| கேஸரிபாத் | ,, | 90 |
| பாயஸம் | ,, | 85 |
| சீரா | ,, | 155 |

### படிகள் (படி ஒன்றுக்கு)

| | | |
|---|---|---|
| லட்டு | ,, | 455 |
| வடை | ,, | 250 |
| போளி | ,, | 220 |
| தோசை | ,, | 100 |
| ஸுகியம் | ,, | 200 |
| ஜிலேபி | ,, | 450 |
| அப்பம் | ,, | 230 |
| தேன்துழை | ,, | 200 |

### நித்திய ஸேவைகள்

| | | |
|---|---|---|
| நித்திய கற்பூர ஹாரததி | ,, | 21 |
| நித்திய நவநீத ஹாரத்தி | ,, | 42 |
| நித்திய அர்ச்சனை | ,, | 42 |

குறிப்பு: ஸஹஸ்ர கலசாபிஷேகம் ஒவ்வொரு புதன்கிழமையும், திருப்பாவாடை ஒவ்வொரு வியாழக்கிழமையும் நடைபெறும்:
மற்றைய விவரங்களுக்கு கீழே கொடுக்கப்பட்டுள்ள முகவரியுடன் தொடர்புகொள்ளுக:

செயலாட்சித் தலைவர்,
திருமலை திருப்பதி தேவஸ்தானம்,
திருப்பதி 517501.

ரூ: 200/-க்கு கிடைக்கும் அமந்த்ரணோற்சவத்திற்கு இரு நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர். ரூ. 25/-க்கு கிடைக்கும் சிறப்பு தரிசன டிக்கெட்டுகள் நாட்டிலுள்ள ஆந்திரா வங்கியின் சில குறிப்பிட்ட கிளை அலுவலகங்களில் விற்பனைக்குக் கிடைக்கும்:

(ஆ-ர்)

தொடர் கட்டுரை

# முக்கவி கண்ட காப்பியம்

## "சுந்தர காண்டம்"

திரு. பு. ஸ்ரீ. அனந்த சுப்ரமண்யம்,
(சாபேயன்)
திருப்பதி:

**த**ன்னைப்பலவாறு சாடிய சீதையைப் பார்த்து இராவணன் கீழ்வருமாறு கூறுகிறான்:

नाशयाम्यहमद्य त्वां सूर्यः संध्यामिवौजसा ।

"எவ்விதம் சூரியன் ஸந்த்யா காலத்தை அழிக்கிறானோ அதைப் போல் இப்பொழுதே உன்னைக் கொன்று விடுகிறேன்" என்று. இவ்வளவுதான் வால்மீகி கூறியுள்ளார். ஆனால் மற்ற இராமாயணங்களில் இருவருக்கும் பலத்த வாக்கு வாதம் நடந்தாகக் கூறப்பட்டுள்ளது. கடைசியில் இராவணன் கூறுகிறான்:

"பள்ளல்! நீர் அயோத்தி நண்ணி
பரதனே முதலினோர் ஆண்டு
உள்ளவர் தம்மை யெல்லாம் உயிர்
குடித்து ஊழித் தீயின்
வெள்ளம் நீர் மிதிலேயோரைவேர்
அறுத்து எளிதின் எய்திக்
கொள்வென் நின் உயிரும் என்னை
அறிந்திலே குறைந்த நாளோய்."

"ஹே! சீதையே!! இராம, லக்ஷ்மணர்களைக் கொல்வதோடு நில்லாமல் அவர்கள் பிறந்த ஊரான அயோத்தியிலுள்ள பரதன் முதலியோரையும், நீ பிறந்த ஊரான மிதிலையிலுள்ளவரையும் வேரோடழிப்பேன். அப்போதும் இணங்காயாயின் உன்னையும் கொன்று விடுவேன்" என்றும் கூறுகிறான்.

"ஈதுரைத்து அழன்று பொங்கி எரிகதிர்
வானை நோக்கித்
தீது உயிர்க்கு இழைக்கும் நாளும்
திங்கள் ஓர் இரண்டில் தேய்ந்தது
ஆதலின் நின்றது என் என்று
அறிந்த ஆறு அறிவாய் என்னப்
போது அரி கண்ணினானை அகத்து
வைத்து உரப்பிப் போனான்"

மேல் கூறிய கம்பர் பாட்டின் கருத்தை வால்மீகத்தில் காணலாம்.

द्वौ मासौ रक्षितव्यौ मे योऽवधिस्ते मयाकृतः ।
ऊर्ध्वं द्वाभ्यां तु मासाभ्यां भर्तारं मामनिच्छतीम्
मम त्वं प्रातराशार्थं आरभन्ते महानसे ।।

"இரண்டு மாதங்கள் உனக்கு அவகாசம் தருகிறேன். அதற்குள் ஒரு முடிவுக்கு வந்து என்னை கணவனாக ஏற்றுக் கொள். அவ்விதம் இரண்டு மாதங்களில் ஏற்றுக் கொள்ளாவிடில் உன்னை சமைத்து காலை உணவாக உட்கொண்டு விடுவேன்" என்று கூறுகிறான்.

இந்தக் கருத்தை கம்பர் "ஓர் இரண்டு திங்கள்" என்று கூறுகிறார். கம்பர் கருத்தை துளசிதாஸரிடம் காணலாம். सीता तें मम कृत अपमाना । कटि हौं तव सिरकठिन् कृपाना" கம்பர் கூறும்போது "நீ இணங்காவிடில் கத்தியால் உன்னை கொன்று விடுவேன்" என்று இராவணன் கூறுவதாகக் கூறுகிறான். அதனையே துளசிதாஸர் கூறுகிறார், "कटि हैं तव सिर कठिन कृपाना" என்ற வாக்யத்தால். இதைக் கேட்ட சீதை இராவணனைப் பார்த்துக் கூறுகிறாள்:

स्याम सरोज दाम सम सुंदर ।
प्रभु भुज करिकर सम दशकंधर ।।
सो भुज कंठ कि तव असि घोरा ।
सुनु सठ अस प्रवान पन मोरा ।।

"ஹே! இராவணா!! யானையின் துதிக்கை போன்ற, அழகானதும், மிருதுவானதுமான ஸ்ரீராமனின் கரங்கள் என் தோள்களில் விழுந்தால் விழட்டும். இல்லாவிடில் உன் கத்தியே என் கழுத்தில் விழட்டும்." என்று. இந்தக் கருத்தை ஹநுமந் நாடகத்தில் பார்க்கலாம்.

विरम विरम रक्षः किं वृथा जल्पितेन
स्पृशति नहि मदीयं कण्ठसीमानमन्यः ।
रघुपति भुजदण्डादुत्पलश्यामकान्तेः
दशमुख भवदीयो निष्कृपो वा कृपाणः ।।

"ஹே! இராவணா!! ஒன்று சொல்லுகிறேன் கேள். அழகான தாமரை மலரைப் போன்ற இராமனின் கைகள் என் மேல் விழுந்தால் விழட்டும். இல்லாவிடில் கருணையற்ற உன் வாள் என்மேல் விழட்டும் அதுவே எனக்கு மிகவும் மகிழ்ச்சி" மேலும், இராவணனின் கத்தியான சந்த்ர ஹாஸத்தை நோக்கிக் கூறுகிறாள். "ஹே! சந்த்ர ஹாஸ கத்தியே, இராமனால் ஏற்பட்ட விரஹாக்னியை அணைத்துவிடு. ஏனெனில் உன் பெயர் சந்த்ர ஹாஸமில்லையா. சந்திரனுக்கு எவ்விதம் குளிர்ச்சியுண்டோ அவ்வித குளிர்ச்சி உன்னிடத்திலும் இருக்குமே" என்று சொல்கிறாள். அதாவது தன்னைக் கொன்றுவிடு என்று வாளினிடம் கூறுவதாகப் பொருள். இந்தக் கருத்தையே பிரஸன்னராகவம் என்ற நாடகத்தில் பார்க்கலாம்:

चन्द्रहास हर मे परितापं रामचन्द्रविरहानल-
जातम् ।
त्वं हि कान्तिजितमौक्तिकचूर्णं धारया वहसि
शीतलमम्भ. ।।

இந்த ச்லோகத்திற்குப் பொருள் மேற்கூறிய கருத்தேயாகும்:

சீதையைக் கொல்வதற்காகத் தன் கத்தியை எடுக்கிறான் இராவணன். அப்பொழுது அங்கேவந்த மந்தோதரி கூறுகிறாள் இராவணனைப் பார்த்து:

मन्दोदरी निवार्याह पतिं पतिहिते रता ।
त्यजैनां मानुषीं दीनां दुःखितां कृपणांकुशाम् ।।
देवगन्धर्वनागानां बहवः सन्ति वराङ्गनाः ।।

"ஹே! நாத! இக்கார்யத்தைச் செய்யாதே! இந்த மனித வர்க்கத்தில் பிறந்தவளும், துக்க மடைந்திருப்பவளும், மிகவும் இளைத்தவளுமான இவளை விட்டுவிட்டு உனக்கு அனுபவிக்கத் தகுந்த தேவ, கந்தர்வ, நாக முதலான இனத்தில் உண்டான வர்களும், அழகானவர்களுமான பெண்கள் இருக்கிறார்களே, அவர்களிடத்தில் உன் காம வேட்கையைத் தணித்துக்கொள்." என்று கூறுகிறாள்.

(தொடரும்)

(19-ம் பக்கத் தொடர்ச்சி)

என்று சொல்லப்பட்டது. அடக்க முடியாது என்பதால் 'த்ருடம்' என்று கூறப்பட்டுள்ளது.

ஆனால் கண்ணனோ அசாத்தியம் எனப் பார்த்தன் நினைத்த மனதை அடக்க இரு உபாயங்களைக் கூறுகிறார்.

அஸம்சயம் மஹாபாஹோ! மனோ
துர் நிக்ரஹம சலம்
அப்யாஸேன து கௌந்தேய வைராக
யேன ச க்ருஹ்யதே

'உறுதியான தோள்களை உடையவனே! மனம் கட்டுப்படாதது. அலையும் தன்மையது. எனினும் பழக்கத்தினாலும் உறுதியினாலும் அதனை அடக்கலாம்'.

உள்ளத்தை எவ்வாறு ஒழுங்கு படுத்தப் பழகுதல் வேண்டும்? இதற்கு பகவானே பதில் கூறுகிறார்.

ப்ரசாந்தாத்மா விகதபீர்ப்ரஹ்ம
சாரிவ்ரதே ஸ்திதஃ
மனஃ ஸம்யம்ய மச்சித்தோ யுக்த
ஆஸீத மத்பரஃ''

,உள்ளம் அமைதி பெற்று, அச்சத்தையகற்றி, பிரம்மசரிய விரதம் காத்து, மனதையடக்கி, சித்தத்தை என்பால் வைத்து, என்னைக் குறியாகக் கொண்டு தியான யோகம் பழக வேண்டும்'.

யோகம் பழகுவதற்கு எட்டு நெறி முறைகளை நம் முன்னோர்கள் தொகுத்துள்ளார்கள். அவையாவன:

1. இயமம்: அஹிம்சை, உண்மையே பேசுதல் முதலியனகடைப்பிடித்தலும், நேர்மையையே மேற்கொண்டு பொறுமையாக இருத்தலும், பிரம்மச்சரிய விரதம் காத்தலும், எதிலும் பற்றற்றிருத்தலுமாகும.

2. நியமம்: தூய்மையாயிருத்தல், என்ன நேர்ந்தாலும் மனங் கலங்காது மகிழ்ச்சியாக இருத்தல், நோன்பு, தவம், முதலியன கடைப்பிடித்தல், சாஸ்திரங்களைக் கற்பது முதலியன நியமித்தல் அடங்கும்.

3. ஆஸனம்· நன்றாக நிமிர்ந்து உட்கார்ந்து தியானம் பழகுதல், வருத்தத்தைக் கொடுக்காத எந்த ஆஸனமாவது போட்டு உட்காரலாம்.

4. பிராணாயாமம்: வாய்வழியாகச் சுவாசிக்கலாகாது. நாசித்துவாரங்களிலேயே சுவாசித்தல் வேண்டும். நாசியில் உட்கொள்ளும் வாயுவுக்கு அபானன் என்று பெயர். வெளிவிடும் வாயுவிற்கு பிராணன் என்று பெயர். அபானனை உள்ளுக்கு இழுப்பதை 'பூரகம்' என்றும் பிராணனை வெளியில் விடுவதை 'ரேசகம்' என்றும், பின்னர் வாயுவை உள்ளே அல்லது வெளியே அடக்குதல் 'கும்பகம்' என்றும்கூறுவர். பிராணயாமத்தினால் மனம் விரைந்து தெளிவடைகிறது.

5. பிரத்யேஹாரம்: புறப் பொருள்களில் மனம் பற்றில்லாதிருத்தல். தூய அறிவுடன் கூடியவனாகவும், உறுதியுடன் தன்னையடக்கி சப்தம முதலிய இந்திரிய விஷயங்களைத் துறந்து விருப்பு, வெறுப்பிற்கு ஆளாகாதிருத்தல்

6. தாரணை· மனதை வேறெந்த பொருள்களின் மீதும் செல்லவொட்டாது ஆத்மாவிலேயே நிலைபெற்றிருககச் செய்வது. இறைவனிடத்தே மனதை வைத்து, இறைவனிடத்தே புத்தியைச் செலுத்தி அவனிடத்தே வசிப்பதுமாகும்.

7. தியானம்· ஞானம் கைவரப் பெற்ற தெளிந்த உள்ளத்தில் ஆத்மாவைப் பார்த்தலும், அறிதலுமாகும்.

8. ஸமாதி: இந்திரியங்களுக்கு அப்பாற்பட்டதாகிய சாசுவதமான இன்பத்தைக் கொடுக்கக் கூடிய நிலை.

எனவே இறைவன் என்பவன் மனம் மொழிகளுக்கு மிகவும் அப்பாலாய், சிறந்த யோகிகளினாலும், ஞானிகளினாலும் அடையக்கூடிய மெய்ஞ்ஞானமாகிய–ஆத்மாவாக–சத்-சித்–ஆனந்தமாக இருக்கிறான்.

---

(21–ம் பக்கத் தொடர்ச்சி)

ரத்திற்குத் தாவ, அரும்புகள் நெருங்கிய முல்லை மகளிரின கற்பைப் புலப்படுத்துவனவராய் விளங்க, மரக்கிளை தோறும் நீல மணி நிறத்தையுடைய மயில்கள் நின்று அகவ, குயில்கள் குருக்கத்தி இலைகள் உதிருமாறு அதன் கட் புகுந்திருந்து கூவ சுருதியை உணர்த்துகின்ற குழலும் தாளமும் இயம்ப, அவ்வோசையை முழவின் இசையும்பாடுவார் தம்மிடற்றுப்பாடலும் சென்று எதிர்த்தாற் போன்று அவுணரை எதிர்த்துப் போர் செய்து கொன்றவனின் நிறத்தையுடைய குன்றத்தின் கண் முழைஞ்சில் முழங்குகின்ற எதிரொலி ஒழியாது-

என்றிவ்வாறு திருமாலிஞ்சோலை மலையின பெருமையைக் கூறும் இப்பாடலில் ஆசிரியர் கடைசி 20 அடிகளில் அங்குக் கோயில் கொண்டுள்ள இரு பெருந்தெய்வமான நம்பி மூத்த பிரானையும் வாசுதேவனையும் அவ்விருவரின் கொடி, அணிகலன், படை ஆகியவற்றையும வருணித்துக் கூறி அவ்விருவரையும் நீவிர் நும் தாரம், மக்கள், சுற்றம் புடை சூழச் சென்று வழிபட்டு உய்மின் என்று கூறி முடிக்கிறார்.

மாலிருங்குன்றம் என்றும் திருமாலிருஞ் சோலைமலை என்றும் இப்பாடலில் குறிப்பிடப்பட்டுள்ள மலை தற்காலத்தில் அழகர் கோயில் என வழங்குகிறது. இது மதுரைக்கு வடக்கே சுமார் 19 கி.மீ. தொலைவில் உள்ளது மதுரையில் கூடலழகர் கோயில் என்று இன்று வழங்கும் பகுதி அந்நாளில் இருந்தையூர் என அழைக்கப்பட்டது.

மாலிருஞ்சோலையின் பெருமையை விரிவாகப் பாடும் மேற்கண்ட பாடலின் ஆசிரியர் இளம் பெருவழுதியார் ஆவார். இவர் கடலுள் மாய்ந்த இளம் பெருவழுதியின் வேறானவர். இவரைச் சமண சமயத்தவர் என்று கூற இடமுண்டு. ★

என்ற கலக்கத்துடன் முயலும் அவனது உள்ளத் துடிப்பை அவனது காவியம் முழுவதும் காணலாம். ஆகவே சீதையின் கற்பினைப் பிற்காலத்துத் தோன்றிய ஒரு காவியத்தின் கூற்றினைக் கொண்டு ஐயுறுதல் பொருத்தமன்று.

மேலும் மணிமேகலையில் வரும் கூற்றின்படி கொண்டாலும், சீதை இராவணனின் உள்ளத்தில் புகவில்லை; புகுத்தப்பட்டாள். மணிமேகலை ‘‘பிறர் நெஞ்சுள் புகார்’’ என்றுதானே கூறுகிறது. பிறர் நெஞ்சுள் ஒருத்தி புகுந்தாள் என்றால் அதில் அவள் பங்கும் சிறிதாவது இருக்க வேண்டுமல்லவா? ஆனால் இங்கோ சீதை எவ்விதத் தவறும் செய்தாளில்லை. ஒரு கற்புக்கரசி அடக்கத்துடன் ஒரு வீட்டில் இருக்கிறாள் என்று வைத்துக் கொள்வோம். அவள் மீதான பொறாமை காரணமாக, துர்க்குணமுள்ள ‘பெண்’ ஒருத்தி மிகவும் சிறப்பாக வருணித்துக் கூறக் கேட்ட ஒரு தூர்த்தன் அக்கற்புக்கரசியினை எண்ணிக் காமுற்றான் என்றால் அது அக் கற்புக்கரசியின் தவறாகுமா? அவை அவள் பார்த்ததோ, அவன் பார்வையில் பட்டதோ இல்லை என்ற நிலையிருக்கும்போது அவளை எவ்வாறு பழிகக முடியும்? இராமன் மீது கொண்ட மையலால், தடையாக இருக்கும் சீதையினை ஒழிக்க, ஒரு வஞ்ச மகள் செய்த சூழ்ச்சியால் சீதை இராவணனின் உள்ளத்தில் புகுத்தப்பட்டாள். இதில் சீதையின் பங்கோ, தவறோ சிறிதும் இல்லை. ஆகவே அவளின் கற்பு சந்தேகிக்கப்படக் கூடாததொன்றாகும்.

என்றாலும் கம்பன் உள்ளத்தில் முழு அமைதி ஏற்படவில்லை போலும். அதனால்தான் போர்க்களத்தில், இராவணன், உடல் முழுதும் இராமனது அம்புகளால் துளைக்கப்பட்டு வீழ்ந்து கிடந்ததைக் கம்பன்,

‘‘வெள்ளெருக்கஞ் சடைமுடியான
வெற்பெடுத்த திருமேனி மேலும
கீழும்
எள்ளிருக்கு மிடமினறி புயிருக்கு
மிடநாடி யிழைத்தவாறோ
கள்ளிருக்கு மலர்க் கூந்தற
சானகியை மனச சிறையிற கரந்த
காதல்
உள்ளிருக்கு மெனக் கருதி யுடல
புகுந்து தடவியதோ வொருவன்
வாளி’’

(யுத்த. இராவணன வதைப்படலம்-239)

என்று கூறுகிறான். மனச் சிறையில் புகுத்தப்பட்ட சீதை இராவணனின் உடலில் இருப்பாளோ? என்றெண்ணி, இராம பாணம் இராவணன் உடல் முழுவதையும் அணுஅணுவாகத் துளைத்துப் பார்த்தது என்று கம்பன் கூறுவதை இன்னும் சற்று ஆழமாக நோக்கினால், சீதையின் நினைவு அவன் உடலில் இருக்கிறதா? என்று இராமபாணம் தடவிப் பார்த்து ஏமாந்து நின்றதே தவிர இராவணனின் உடலில், சீதையின் நினைவு இல்லை என்பது இதனாலும் நிரூபிக்கப்படும்.

ஆகவே எவ்வகையில் பார்த்தாலும், சீதையின் கற்புச் சந்தேகிக்கப்படக் கூடாததொன்று. இச்சிறையிருந்த செல்வியின் குணங்களை இனிக் கற்புச் செல்வி, அறிவுச் செல்வி, அழகுச் செல்வி முதலான சிறு தலைப்புகளில் சுருக்கமாக ஆராய முற்படுவோம். (தொடரும்)



ஸ்ரீ லக்ஷ்மீ நரசிம்மசுவாமி கோயிலின் ராஜ கோபுரம், சோளிங்கர்.
போட்டோ: திரு. வி. எஸ். ஸ்ரீநிவாசன், தஞ்சாவூர்.

# தங்கு வசதி விவரங்கள்

திருமலையிலுள்ள கீழவரும் காட்டேஜுகளுக்கான வாடகை விவரங்கள் 1–12–78 முதல கீழ்க்கண்டவாறு மாறறஞ் செய்யபபட்டுள்ளன.

| எண் | காட்டேஜ் அல்லது அறைத் தொகுதியின பெயர் | தற்போது வசூலிக்கப் படும்தொகை (நாள் ஒன்றிற்கு) |
|---|---|---|
| | | ரூ. |
| 1. | எச். ஆர். காவியப்பா காட்டேஜ் | 100–00 |
| 2. | நாராயணகிரி காட்டேஜஸ் 1 to 4, 13 to 20 | 40–00 |
| 3. | டி. பி. காட்டேஜ் (உள்ளே) 1 to 8; ஏ to ஜி; III வது வரிசை 1 மற்றும் 16; சிஎம்சி; விவிசி-6; எஸ்எனசி; கேவி.ஆர்; விவிசி-1; விவிசி-8; டிபிசி-10 | 30–00 |
| | (a) மேற்படி காட்டேஜின் A பகுதி | 18–00 |
| | (b) ,, ,, B பகுதி | 12–00 |
| 4. | டி. பி. காட்டேஜஸ் (வெளியே) விவிசி; எம்பிசி; ஏடிசி. | 25–00 |
| | (a) மேற்படி காட்டேஜின் A பகுதி | 15–00 |
| | (b) ,, ,, B ,, | 10–00 |
| 5. | டி.பி.காட்டேஜஸ்-IIIவது வரிசையிலுள்ள தனிஅறைகள் | 10–00 |
| 6. | எஸ்.வி.ஜி.எச்-இல உள்ள பெரிய அறைத் தொகுதிகள் | 35–00 |
| 7. | எஸ்.வி.ஜி.எச்-இன் மூலையிலுள்ள அறைத் தொகுதிகள் | 25–00 |
| 8. | எஸ்.வி.ஜி.எச்-இல் உள்ள வேறு அறைத் தொகுதிகள் | 20–00 |

| திருப்பதியில் | | கிடைக்கும் அறைகள் எணணிக்கை | |
|---|---|---|---|
| 1. | தி. தி. தேவஸ்தானம் கஸ்ட் ஹவுஸ்: (இரண்டு படுக்கைகளைக் கொண்ட அறைத்தொகுதி ஒன்றிற்கு) | 18 | ரூ. 16/– |
| 2 | ஸ்ரீநிவாச சத்திரம் (மாடியில்) (மேசை நாற்காலிகளைக் கொண்ட அறைகள்)இரண்டு படுக்கைகளைக் கொணட அறைத் தொகுதி ஒன்றிற்கு: | 30 | ரூ. 12/– |
| 3. | ஸ்ரீநிவாச சத்திரம் (கீழ்ப்பகுதியில்) (மேசை நாற்காலி வசதிகளைக் கொண்டது) நான்கு படுக்கைகளைக் கொண்ட அறைத்தொகுதி ஒன்றிற்கு: | 40 | ரூ. 15/– |

குறிப்பு: மேசை, நாற்காலி போன்ற வசதிகள் இல்லாத சத்திரங்களில் தங்கும் அறைகள் யாத்திரிகர்களுக்கு இலவசமாக வழங்கப்படும்.

செயலாட்சித் தலைவர்.

தி. தி. தேவஸ்தானம், திருப்பதி.

*(14-ம் பக்கத் தொடர்ச்சி)*

லாண்டு'' என்கிறதை பெரியவாச்சான் பிள்ளை வெகு அழகாக விவரிக்கிருர். அதாவது, 'தகட்டிலழுத்தின மாணிக்கம் போலே திருவனந்தாழ்வானின் சேர்த்தியால் வரும் அழகு நித்ய ஸ்ரீயாகச் செல்ல வேணும்' என்றும், ஏதேனுமொன்றை விரும்பி வந்தவர்களையும் ''எனக்காகிக் கொள்ளவல்லேன்'' என்று கொடி கட்டியிருக்கிற எம்பெருமானது சக்தி நித்ய ஸ்ரீயாய்ச் செல்லவேணும் என்றும் திருப்பல்லாண்டு சொல்ல வருகிருர்கள் என்கிருர்.

இப்படி மூன்று வகையான அடியார் குழாங்களும் ஆழ்வாருடன் ஒன்று கூடி எம்பெருமானின் திவ்ய மங்களத் திருமேனியைக்கண்டவுடன், அவர்களுள் எம்பெருமானுக்கே ஏழு தலைமுறையாகக் கைங்கர்யம் செய்யும் அநந்ய பிரயோஜனர்கள் ''உடுத்துத் களைந்த நின்......கூறுதுமே'' என்கிற பாட்டால் மங்களாசாசனம் செய்கிருர்கள். அதாவது, எம்பெருமான் உடுத்துக் களைந்த பீதகவாடையைத் தாங்கள் உடுககவும், சூட்டு நன்மாலைகளைச் சூடவும் செய்ய நாங்கள் இருக்கிருேம். இப்படிப்பட்ட நாங்கள், விரிந்த படங்களையுடைய திருவனந்தாழ்வானுகிய படுக்கையிலே படுத்துக்கொண்டு இருக்கும்-திருவோண நட்சத்திரத்தில் பிறந்த எம்பெருமானுக்குப் பல்லாண்டு பாடுவோம் என்று ஆழ்வாருடன் சேர்ந்து மங்களாசாசனம் செய்கிருர்கள்.

கைவல்யார்த்திகளாக இருந்து தங்கள் ஸ்வரூபம் அறிந்து திருந்தித் திருவாழியினுல் வைஷ்ணவ சின்னமான திருவிலச்சினையைப் பொறித்துக்கொண்ட அநந்ய பிரயோஜனர்கள், ''எந்நாள் எம்பெருமான்!............ பல்லாண்டு கூறுதுமே'' என்கிற பாட்டால் மங்களாசாசனம் பண்ணுகிருர்கள். அதாவது, நாங்கள் 'ஸர்வஸ்வாமியான எம்பெருமானுக்கே அடிமைப் பட்டவர்கள்' என்று அடிமை ஓலை எழுதிக் கொடுத்த நாள எதுவோ, அந்த நாளே எங்களுடைய மேல் ஏழு தலைமுறையையும் அடிமை செய்யக் காரணமாய கைவல்ய அனுபவத்திலிருநது விடுதலை பெறறு உஜ்ஜீவித்தது. அழகிய நாளிலே, வட மதுரையில் கண்ணனுகப் பிறந்து கம்சன் வில்லை முறித்தவனும், ஐந்து தலைகளையுடைய நாகத்தின மேல் நடனம் செய்தவனுமான ஸர்வேச்வரனுககு, ஆழ்வாருடன் சேர்ந்து பல்லாண்டு பாடுகிருேம் என்றனா.

இப்பாட்டில் ''ஐந்தலைய பைந் நாகத்தலைப் பாய்நதவனே! உன்னைப் பல்லாண்டு கூறுதுமே'' என்கிற தொடருக்குக் கூரத்தாழ்வானின் மகனுக இருக்கும் பட்டர், ராம கிருஷ்ண அவதாரங்களைக் கொண்டு அனுபவித்ததை பெரியவாச்சான் பிள்ளை எடுத்துக் காட்டுகிருர். அதாவது, ''ராமாவதாரத்தில் ராம லக்ஷ்மண பரத சத்ருக்னர்கள் மிடுக்காயும், கல்யாண குணங்கள் நிறைந்தவர்களாயும், தந்தை சக்கரவர்த்தியாயும்,



தேவியருடன் ஸ்ரீ பார்த்தசாரதிசுவாமி—திருவல்லிக்கேணி.
S. V. K. S. ஸ்ரீநிவாசன்-திருப்பதி.

மந்திரிகள் வசிஷ்டர் முதலானோர் மேதாவிகளாயும், ஊர் அயோத்யை யாயும், காலம் திரேதாயுகமாயும் இருந்ததால் அங்கு ஒரு பயமும் இல்லை. இக்கிருஷ்ணவதாரத்திலோ எனின், வந்து பிறந்த இடம் பகை வீடாய், கம்சனுக்கு பயப்படும் ஊராய், தந்தை இடைக் குலத்தவராய், பிள்ளைகளான கிருஷ்ண பலராமர்கள் தீம்பருமாய், காலம் கலிகாலத்தோடு தோள் தீண்டியான துவாபராந்தமாயிருக்கையாலே என் வருகிறதோ! என்று எண்ணுவதற்கு அப்போது ஆழ்வார்கள் இல்லை காணும். அந்த குறை தீர இன்று ஆழ்வார் பல்லாண்டு பாடுகிறார்'' என்று பட்டர் அருளிச் செய்தார்.

'' அல் வழக்கு.........கூறுவனே ''
என்கிற பாட்டால் ஐச்வர்யார்த்திகளாக இருந்து பின்னர் தங்கள் ஸ்வரூபம் அறிந்து அநந்ய பிரயோஜனர்களாகத் திருந்தி ஆழ்வார்களுடன் சேர்ந்து மங்களாசாசனம் செய்கிறார்கள். அதாவது தவறான செய்கைகள் (தேகத்தில் ஆத்ம புத்தி, ஆத்ம வஸ்துவில் சுதந்திரத்தன்மை, மற்ற தேவதாநதரங்களை வணங்குதல், வேறு ஒரு பலத்தை எண்ணி எம்பெருமானை துதித்தல்) ஒன்றும் இல்லாமல், திருக்கோட்டியூருக்கே ஆபரணமாக விளங்கும் பரம பாகவதரான செல்வ நம்பியைப்போல் (வல்லபராஜனின் மந்திரி) நாங்களும் ஸர்வஸ்வாமியான உனக்குப் பழமையாக அடிமையாயிருக்கிறோம். அந்தப் பாக்கியத்தால், கல்யாண குணங்கள நிறைந்த இத்திவ்ய மங்கள திருமேனியால் எல்லா பாபங்களைப் போக்கவல்ல உனக்கு ஆயிர நாமங்கள் சொல்லிப் பல்லாண்டு பாடுகிறோம் என்று ஆழ்வாருடன் சேர்ந்து மங்களாசாசனம் செய்கின்றனர்.

ஆக, இப்பிரபந்தத்தைச் சொல்பவர்களுக்கு ஒரு பயனைச் சொலலுவதாய் ''பல்லாண்டென்று............ பல்லாண்டே'' என்கிற பாட்டு மூலம் மங்களாசாசனம் பண்ணுகிறார் ஆழ்வார். மேலே சொன்ன மூன்று வகையான அடியார் குழாங்கள் மட்டுமல்லாமல் ஸம்ஸாரிகள்கூட இத்திருப்பல்லாண்டைஇடைவிடாமல் சொல்லுவார்களாயின் அதற்குப் பயனாக அவர்கள் மங்களாசாசனம் பண்ணத் தகுதியுடையவராக ஆவர்கள் என்கிறதை இப்பாட்டால் எடுத்துக் காட்டுகிறார். அதாவது, இயற்கையிலேயே தூயவனும், வைகுண்டத்தில் சார்ங்கம் என்னும் வில்லைக் கையில் ஏந்தியவனுமாயும் உள்ள எம்பெருமானைக் குறித்து பல்லாணடு என்று பாடியஇப்பிரபந்தத்தை இடைவிடாமல் என்றும் சொல்லுபவர்கள் பரமாத்மாவான ஸ்ரீமன் நாராயணனைப் பரமபதத்திலும் சூழ்ந்து இருந்து, கணக்கற்ற ஆண்டுகள் பல்லாண்டு பாடுவர்கள் என்று கூறுகிறார்.

இவ்வளவு பெருமைவாய்ந்த இத்திருப்பல்லாண்டை இயற்றிய பெரியாழ்வாரையும், இப்பிரபந்தத்திற்குப் பொருள் விளக்கம் அருளிய பரம காருணிகரான பெரியவாச்சான் பிள்ளையையும், அவருக்குப் பின் இத்திருப்பல்லாண்டின் ஏற்றத்தைப் புகழ்ந்து பாடிய மணவாள மாமுனிகளையும் நாம் அடிபணிந்து வணங்கி உய்வோமாக.

★

# ஓர் அறிவிப்பு

கி. பி. 15-ஆம நூற்றுண்டைச் சாந்தத் தெலுங்கு இசைக் கவிஞரும், அவ்வேழு மலைகளில நின்றவண்ணம கோலம் கொண்டிருக்கும வேங்கடவனின் சிறந்த பக்தருமான ஸ்ரீ தாளளபாக்க அன்னமாச்சார்யார் அவ்நெடியோன் மீது பக்திச சுவையும் காதற்சுவையும் மிக்குஒளிர 32,000 கீர்த்தனைகளை இயற்றியுள்ளார். அன்னாரின் அச்சீரமைமிகு கீர்த்தனைகளின் புகழ எங்கும பரவும் வகையில் அககவிஞரின் நினைவாக, திருப்பதியில் ரூ 4.5 இலட்சம செலவில் 'ஸ்ரீ அனனமாச்சாயா கலாமந்திரம்' ஒன்று கட்டப்பட்டுளளது. தற்போது அக்கலா மந்திரத்தில், சமயப்பற்றும் ஆன மீகப்பற்றும் எங்கும் தழைத்தோங்கும் வகையில் நூலகம் ஒன்று திறக்கப்பட்டுள்ளது. இந்நூலகத்திற்கு இந்து சமயம், புராணம் மற்றும் இந்தியக் கலாசாரம் சம்பந்தபபட்ட பத்திரிகைகள், நூல்கள் பக்தர்களிடமிருந்து இலவசமாக வரவேற்கப்படுகின்றன. மக்கள் சேவையே மகேசன் சேவையாகக் கொண்டு, இப்புனித சேவையில் பங்கேற்று அவ்வெல்லாம் வல்ல அலர்மேல் மங்கை உறைமார்பனின் அருளைப்பெறுவீர்களாகுக!

செயலாட்சித் தலைவர்,
தி. தி. தேவஸ்தானம், திருப்பதி.

(12-ம் பக்கத் தொடர்ச்சி)

யில் ஆணியால் அறைந்த போதும், 'ஐயோ பாவம் தாங்கள் செய்வது இன்னதென்பதை அறியாத மக்கள் இவர்கள். அவர்களை மன்னித்தருளும் பரமபிதாவே' என்று ஆண்டவனிடம் மனபூர்வமாக முறையிட்டாரே அந்த ஏசுநாதர் பொறையின் பூஷணம். சத் சங்கம் நடநது கொண்டிருக்கையில் சிவானந்தாசிரமத்தில் தமது இருக் கைக்குப் பின்னுலிருந்து தடி கொண்டு மும்முறை தம்மைத் தாக்கிய முரடனை யும் மன்னித்து பிறர் அவனுக்குத் தீங்கு தாரத வண்ணம் அவனைக் காப் பாற்றி கைச் செலவுக்குப் பணமும் ரயில் டிக்கெட்டும் வாங்கிக்கொடுத்து பத்திரமாக ஊருக்கு அனுப்பி வைத் தாரே அந்த குருதேவர் ஸ்ரீ சுவாமி சிவானந்தர் பொறையின் பூஷணம். தம்மைத் தாக்கிய திருடர்களைத் தாக் கச சென்ற தமது பக்தர்களைத்தடுத்து, 'அவர்களை அடிக்காதீர்கள். அவர்களை அடிப்பது என்னை அடிப்பதற்கு நிகர்' என்று மன்னித்தாரே அந்த பகவான் ரமணர் பொறையின் பூஷணம். இத் தகைய மேலாம் குணங்கள் இறைவ னது சிறந்த பெண்மை அம்சங்கள் ஆகின்றன.

பிருஹத ஸாம ததா ஸாம் நாம்
காயத்ரீ சந்தஸா மஹம்|
மா ஸாஞம் மார்கசிஷோऽஹம்
ருதூஞம் குஸுமாகரஃ ||

'ஸாம கானங்களில் பிருஹத் ஸாமம் நான். சந்தங்களில் நான் காயத்திரி. மாதங்களில் மார்கழி. பருவங்களில் வஸந்த காலம் நான்'

வேதங்கள நான்கினுள் இசை நிறைநதது ஸாம வேதமாகும். இசை க்கு மயங்காத உயிரே கிடையாது. சிவனும் திருமாலும் ஸாம கானப் பிரி யர்கள் கயிலயங்கிரியில் சிவ பெரு மானை ஸாம கானம்பாடி இராவணன் மகிழ்வித்ததாகப் புராணம் கூறும். இன்றும் ஸாமவேதத்தை இசையுடன் வேத விற்பனனர்கள் ஓதக் கேட்கை யில் நம்மை அறியாத ஒரு உத்வேக மும் உணர்வும் நம்மிடம் பரவுவதை நாம் காணலாம். அத்தகைய மகிமை வாய்ந்த ஸாம வேதத்தில் பிருஹத் ஸாமம் என்பது மிகச் சிறந்தது. பிருஹதி எனும சந்தஸில் அமைக்கப் பெற்றது இது.

செய்யுள் அமைப்பு அல்லது யாப் பிலக்கணத்தை சமஸ்கிருதத்தில் சந் தம் எனக் கூறுகிறோம். வேதத்தில் உள்ள பலவிதமான செய்யுள் அமைப் புக்களில் காயத்திரீ சந்தம் மிக முக் கியமானதாகிறது. பல்வேறு தெய் வங்களைப் பற்றிய வாழ்த்தும், வணக் கமும் காயத்திரீ சந்த வடிவமாக அமைக்கப்பட்டிருக்கின்றன. ருத்திர காயத்திரீ, தேவி காயத்திரீ, சூரிய காயத்திரீ, பரமஹம்ஸ காயத்திரீ போன்றவை அவற்றில் சில. செய்யுள் அமைப்பு மற்றும் கருத்து விசேஷம் ஆகியவற்றை முன்னிட்டு சந்தங்க ளில் தாம் காயத்திரீ என்று பகவான் பகருகிறார்.

பொதுவாக சூர்ய காயத்திரீயையே நாம்காயத்திரி எனக்குறிப்பிடுகிறோம். இதைத் தான் ஜபத்திற்கும் தியானத் திற்கும் நாம் பயன்படுத்துகிறோம். சூரிய காயத்திரி பின்வருமாறு;

ॐ तत् सवितुर्वरेण्यं
भर्गो देवस्य धीमहि ।
धियो यो नः प्रचोदयात् ।।

''யார் நம் அறிவைத் தூண்டுகிறரோ அந்தச் சுடர்க்கடவுளின் மேலான ஒளியை நாம் தியானிப்போமாக''

அறியாமையெனும் காரிருள் நம் மனத்திலிருந்து அகன்று மெய் அறிவு எனும் ஒளி அங்கே பரவவேண்டி கண் கண்ட கடவுளாம் சூரிய பகவானிடம் நாம செய்து கொள்ளும் பிரார்த்த னையே இது. 'பகவானே! உலகைக் கவ்வி நிற்கும் புற இருளைப் போக்கி உயிர்களையெல்லாம் நீர் எழச் செய் வது போன்று, அஞ்ஞானத் துயிலில் மூழ்கியிருக்கும் என்னையும் தட்டி எழுப்பி ஆட்கொண்டருளமாட்டீரா!' என்று பக்தன சூரியதேவனிடம் வேண் டுதல் செய்கிறான்.

மாதங்களில் மார்கழிக்குத் தனிச் சிறப்புக்கப் பல உள்ளன. மானிடர் களாகிய நமது ஒரு வருடம் தேவர் களுக்கு ஒரு நாள் ஆகும். எனவே மார்கழி மாதம் அந்த நாளின் பிரம்ம முகூர்த்தமான அதிகாலை வேளையா கிறது. ஆத்ம சாதனைக்கு பிரம்ம முகூர்த்தம் சிறந்த வேளையாகும். தை மாதமான உத்தராயண புண்யகாலம் சூரியோதத்துக்கு நிகர். தை முதல்

## ஆர்ஜித தெப்போற்சவம்

திருமலையில் வருடத்தில் மூன்று நாட்கள் நடத்தப்பட்டு வரும் தெப்போற்சவம், இப்பொழுது யாத்திரிகர்களின் விருப்பத்தை நிறை வேற்றும் வகையில், ஒவ்வொருவாரமும், செவ்வாய்க் கிழமைகளில் நடத்தப்பட்டு வருகின்றது. அன்று இறைவன் திருப்பள்ளி ஓடையில் (தெப்பத்தில்) எழுந்தருளி பக்தர்களுக்கு அருள் புரிவார். ரூ. 1500/- செலுத்தி பக்தர்களும் இவ்வார்ஜித தெப்போற்சவத்தில் பங்கேற்க லாம். பங்கேற்கும் கிருஹஸ்தர்க்கு, ஸ்ரீ வேங்கடேஸ்வரரின் திருவுரு வம் பதித்த சுமார் 5 கிராம் எடையுள்ள தங்கப்பதக்கம் ஒன்றும், வஸ்த்ர பஹுமானமும் மேலும் நைவேத்தியமும் வழங்கப்படும். அது மட்டுமன்றி, கிருஹஸ்தரைச் சார்ந்த 10 நபர்கள், இறைவனின் தரிசனத்திற்காக அனுமதிக்கப்படுவர்.




# ஸ்ரீ வேங்கடேஸ்வர சுவாமி கோயில்

மற்றும்

# ஸ்ரீ சந்திரமௌளீஸ்வர சுவாமி கோயில்

## தி. தி. தேவஸ்தானம் ஆந்திர ஆஷ்ரமம், ரிஷிகேஷ் உ.பி.

### ஆர்ஜித அட்டவணை

| பொது | | ஸ்ரீ வேங்கடேஸவர சுவாமி கோயில | ஸ்ரீ சநதிரமௌளீ-ஸவர சுவாமி கோயில் |
|---|---|---|---|
| | | ரூ. | ரூ. |
| அர்ச்சனே | டிக்கெட் ஒனறு | 2-00 | 1-00 |
| ஹாரத்தி | ,, | 0-50 | 0-50 |
| சகஸ்ரநாம அர்ச்சனே | ,, | 5-50 | 5-00 |
| தோமாலந்தார தரிசனம் | | 5-00 | — |
| தேங்காய் வர்த்தனு (உடைப்பது) | டிக்கெட் ஒன்று | 0-25 | 0-25 |

| | | ஸ்ரீ ராஜலக்ஷ்மி அமமை யார் கோயில் | ஸ்ரீ பார்வதி அம்மை யார் கோயில் |
|---|---|---|---|
| அர்ச்சனே | ,, | 1-00 | 1-00 |
| ஹாரத்தி | ,, | 0-50 | 0-50 |
| தேங்காய் வர்த்தனு (உடைப்பது) | டிக்கெட் ஒன்று | 0-25 | 0-25 |

| நைவேத்தியஙகள் | | ரூ |
|---|---|---|
| தத்யோதனம் | முழுத் தளிகை | 45-00 |
| புளியோதரை | ,, | 45-00 |
| பொங்கல் | ,, | 60-00 |
| இனிப்புப் பொங்கல் | ,, | 65-00 |

குறிப்பு : ஒவ்வொரு நைவேத்தியத்திற்கும், ஆர்ஜித கட்டணத்தைத் தவிர மேற்கொண்டு சிங்கமொருவுக்காக ரூ. 3/- செலுத்த வேண்டும். மேலும் அரைக்கட்டண விகிதத்தில், இறைவனுக்கு அரைத்தளிகை நைவேத்தியமும் பக்தர்கள் செய்விக்கலாம்.

ஆறுமாத காலம் தேவர்களுக்குப் பகல். அதிகாலேயில் உறங்குவது அனுரோக்கிமாகும். அந்தவேளே ஜபம், தியானம், சுவாத்தியாயம் முதலிய நற்செயல்களுக்குகந்ததாகும இதை முன்னிட்டே மார்கழியில் பாவைப் பாடல்களேப் பாடிப்பாடி, பள்ளியெழுச்சியில் ஈடுபடுமாறு நம்மை மகான்கள கேட்டுக்கொள்ளுகிருர்கள். தவிர மார்கழி மாதத்தைக் கடவுள் வழிபாட்டுக்கென்றே நாம் ஒதுக்கி விடவேணடும எனற கருத்துடன் அநத மாதததில விவாகம, மனே புகுதல் போன்ற மற்றக் காரியங்கள் எதையும் செய்யக்கூடாது என அதை மறைமுகமாக 'ஊனமாதம்' என்று நம் முனனோ கூறியிருககின்றனர். மார்கழி தேவாராதனேக்குரிய தால அது தனிச சிறப்பு வாய்ந்ததாகிறது.

பனிக் காலததில் பட்டுபபோன மரங்கள் யாவும் வஸந்த காலத்தில மீணடும் புத்துயிர் பெற்று தளிர்க்கின றன. வெறும் கம்புகளாகக் காட்சி தந்தவற்றில இலேகள் மீண்டும் தளிர்ப்பதால் அதை 'Spring Season' என கின்றனர் மேனுட்டவர். எங்கு நோக கினும புத்துயிரும் புதிய சக்தியும காணக் கிடைக்கின்றது. 'நான் குணக கேடன். நான் ஒன்றுக்கும் உதவாவன்' என்று கூறும் மனிதர்களேப் பார்த்து, 'மனிதர்களே! என்னேப பாருங்கள். நீஙகளும் முயன்ருல் எங்களேப் போல புத்துயிர் பெற்று புது வாழ்வு வாழலாம்!' என இளவேனிற கால அந்த மரங்கள் சொல்வதைப போல் தோன்றுகின்றன. என்வேதான பருவங்களில் இறைவன் தம்மை இளவேனிற்காலமான வஸந்த காலம எனக்கூறிக் கொள்கிருர்.

(தொடரும்)

# பக்திக்கு ஒரு பிரகலாதன்

பக்தர்களுக்குள் மிகச சிறநதவன் பிரகலாதன். அச்சிறப்பினே பினவரும பழமொழியினுல தெளிவாக விளககிக் காட்டலாம். 'வில்லுககு விஜயன சொல்லுககு இராமபிரான, பக்திக்கு பிரகலாதன' எனபதாகும்.

திரு. R. பதமநாபன், B A, B T,
வேலூர் — 12

பிரகலாதனின் தகப்பனுகிய இரணய கசிபு தனக்கு எந்த விதத்திலும் மரணம வராமல் இருக்கவேணடுமென்று ஆவல் கொண்டு, தவம் புரிந்தான். பிரம்மதேவன் பிரத்தியக்ஷம ஆகி, 'இன்னஇன்ன பொருள்கள் மூலம மரணம் வரக்கூடாது' என்று கேட்டால் நான் அநத வரத்தைக்கொடுக்க முடியும்' என்முர்.

'எந்தப் பிராணிகளாலும், இரவிலோ, பகலிலோ, உயிருள்ள வஸதுவாலும், உயிரற்ற வஸ்துவாலும் மரணம் வரக்கூடாது; மேலும் எவ்வித ஆயுதங்களினுலும் எனக்கு மரணம் நேரிடக்கூடாது!' என்று பலவிதமாக வரங்களைக் கேட்டு, பெற்றுக்கொண்டு மரணமற்ற வாழ்வு வந்து விட்டதாகக் கர்வம் அடைந்திருந்தான்.

சில ஆண்டுகள் கழிந்த பின்னர் பிரகலாதனைப் பலவிதத்தில் துன்புறுத்திக் கொடிய குற்றம் செய்தும், பகவான் மகாவிஷ்ணு தன் பக்தனைக் காப்பாற்றும் பொருட்டு, நான்காம் அவதாரமான நரசிங்க அவதாரம் எடுத்து இரணியகசிபுவைத் துரத்திச் சென்று, மாலை நேரம் வரும்வரை அவனுடன் கடுஞ்சமர் புரிந்து, பிறகு ஒரு வாயில் நிலையில் உட்கார்ந்து கொண்டு தம்மடியின் மீது வைத்துக் கொண்டு, நகங்களான ஆயுதத்தினுல் அரக்கனுடைய வயிற்றைக் கிழித்து, அவன் உதிரம் சிறிதும் கீழே சிந்தாமல், பிரம்மாவின வரங்களுக்கு எநத விமான பங்கமும் ஏற்படாமல் அவனைக் கொன்று, தம் பக்தனைக் காப்பாற்றினுர் என்று ஸ்ரீமத் பாகவதம் 7-ஆம் ஸ்கந்தம் கூறுகிறது.

பக்த சிகாமணியான பிராலாதன் பக்திக்கு அருமையான விளககத்தைக் கூறுகிமுன். அதாவது, 'சாதாரண மக்களுக்கு உலக விஷயங்களில் ஓயாது மனம செனறு, அவவுலகப் பொருள்களை எவ்விதத்திலேனும் தேடிச் சுகம் பெறுதல வேணடும் என்று எப்படித் தோன்றுகிறதோ, அவ்வாறே ஓயாது பகவானிடம் மனம் செனறு அவரை அடைந்து மகிழ வேணடும என்று தோனறுமாஞல், அதுவே பக்தி எனப்படும்'.

ஆகவே பக்தி யோகத்தின் (கீதையில்) முக்கியமான அம்சங்கள்:-

1. ஆராதிக்கும் பரம்பொருளிடம் மனம், வாக்கு, காயம் பதிந்திருத்தல்.
2. 'நான் வேறு' என்ற எண்ணம் நாளுககு நாள் குறைந்துகொண்டே வந்து, இறுதியில் அது ஒழிந்து ஆராதிக்கப்படும் பொருள் மாத்திரமே நிற்றல் என்பனவாகும்.

மேறபடி அம்சங்களை பிரகலாதன் நூற்றுககு நூறு பெற்றிருந்ததால், அச்சிறுவனை ஸ்ரீமத் பாகவதம் 'பக்திக்கு ஒருவன்' என்று கூறி சிறப்புறச் செய்கின்றது. தற்கால நிலையில் பிரகலாதனை 'கோடியில் ஒருவன்' என்றும் கூறலாமல்லாவா?

'' சாதுக்களைக காப்பதற்கும,
தீயவர்களை அழிப்பதற்கும்,
தருமத்தை நிலைநாட்டுவதற்கும்
யுகநதோறும் வந்துதிப்பேன் ''

பகவான் ஸ்ரீ பகவத்கீதை
அத்-4-ஸ்லோகம் - 8

★

## சங்கடம் தீர்க்கும் வேங்கடவன்

இன்னிசைக் கவிஞர். இரா. நக்கீரன்-வேலூர்.

வாஞேக்கிக் கவிபாடும் வடவேங்கடம்—நல்
வாழ்வுக்குத் துணைசேர்க்கும் திருவேங்கடம்
தேஞேங்கு குளிர்நீழல் திருவேங்கடம்—அவன்
தாள்சேர்ந்தார் கினியில்லை வீண் சங்கடம்: (வா)

பகையணங்காழியும் பால்வெண் சங்கமும,
பளபளவெனுமபடி அணிமணி யணிந்து,
தகைபெறும் தாமரைக் கையினிலேந்தி,
தனக்கென இணையெதும இலையெனும் வணணம் (வா)

நலங்கிளராரம் மார்பினில் பூண்டவன்;
நலம்பலச் செய்யும் நெஞ்சினைக் கொணடவன்;
பொலம்பூ ஆடையிற் பொலிந்தவன்; மாலவன்
புகழுக்குரியச் செங்கண் நெடியவன்; ஆணடவன் (வா)

விரிகதிர் வெம்மையை வெண்மதி தணிக்கும்;
வந்திடும் இன்னலை நம்பிக்கைக் குறைக்கும்;
அரைத்திட அரைத்திடச் சந்தனம் மணக்கும்;
ஆண்டவன் பேர்சொல உளளமே இனிக்கும் (வா)

கரு: சிலப்பதிகாரம் காடுகாண காதை 41-51.

(10-ம் பக்கத் தொடர்சி)

மண்டபத்திலே, ஸ்ரீபகவத் விஷயம் முற்றவும் திருச்செவி சாற்றியருளி, சாற்று மறையன்று ஆழ்வார்களு டனே பெரிய திருவோலக்கமாக எழுந் தருளி இருந்து, ஜீயர் ஈடு சாற்றின வுடனே அர்ச்சகமுகேந "ஸ்ரீசைலேச தயா பாத்திரம் தீபக்த்யாதி குணர் ணவம்-யதீந்த்ர ப்ரவணம் வ ந்தே ரம்ய ஜாமாதரம முநிம்" என்கிற தனியனுடன் ஸகல வரிசைகளையும் ஸாதித்து, தாம் ஸாதித்த வரிசையை தம் ஆராமங்களிலும் நடத்தச் சொல்லி, திவ்ய தேசங்களுக்குத் திரு முகப்பட்டயம் ஸாதித்து அது முத லாகச் சுற்றுக்கோவில்களிலும், எல்லா திவ்ய தேசங்களிலும் திவ்ய ப்ரபந்த ஸேவா காலங்களில் ஆதியிலும் அநதத் திலும் இந்தத் தனியன் இன்று வரை ஸேவிக்கப்பட்டு வருகிறது.

"ராமானு ஜார்ய திவ்யாக்ஞாவர்த்த
தாம அபிவர்த்த தாம்"

உடையவர் ஏற்படுத்தின எழுபத்தி நான்கு சிம்மாஸனுதிபதிகளில் சிலரை மட்டும கோயில் ஆசார்ய புருஷர்கள் என்று நியமித்து, இந்த கோஷ்டி உடையவர் காலத்திற்குப்பின் "பெரிய நம்பி இராமானுஜமுடையார்" என்கிற அருளிப் பாடுடன் நாளது வரை நம பெருமாள் கோஷ்டியில் நடந்து வருகிறது. இவர்களுக்கு பிர தான எல்லாக் காலங்களிலும் விசேஷ மரியாதைகள் நடக்கின்றன.

ராமானுஜார்ய திவ்யாஞ்ஞை கொஞ்சமேனும் மாறுமல், அதன்படி அன்று முதல் இன்று வரை எல்லா உத்ஸ வாதிகளும நன்கு நடைபெறு கின்றன. இவைகளில், நம்பெருமாளின் புறப்பாட்டின்போது ஆஸ்தானம் சேருமளவும், நம் பெருமாளின் நடை யழகு ஸிம்ஹகதி, வ்ருஷபகதி, கஜ கதி, சார்த்தூலகதி, ஸர்ப்பகதி என் கிற பஞ்சகதியழகை நாம் அனுபவிக் கிறேம். "நடையழகு நம் பெரு மாளைக் காணுத கண்ணெணைக் கண்ணே" என்று சொன்னல் தவரு காது. நம் பெருமாளின் திவ்ய மங் கள விக்ரஹமும் திவ்யோத்ஸவத்தில் ஸர்வாபரண பூஷிதமான திருமேனி யும ஸேவித்து பரமானந்தானுபவத தில் ஆழ்ந்திருப்பதே நம்முடைய ஸ்வரூபமானபடி-வேத ஸ்வரூபியான பெரிய பெருமாள் வேதச்ருங்கங்களை யுடைய ப்ரணவாகார விமானத்தின கீழ் வேதாக்ஷர காயத்ரீ மண்டபத்தில் இருந்து கொணடு நம்போல்வாருக்கு நித்திய ஸேவை ஸாதிக்கிருர்.

"அடியார்களவாழ; அரஙக நகா வாழ்க,
சடகோபன் தண்டமிழ் நூல் வாழ;
கடல் சூழந்த மண்ணுலகம் வாழ,
மணவாள மாமுனியே இன்னுமொரு
நூற்றுண்டிரும்"

முற்றும்.

(8-ம் பக்கத் தொடர்ச்சி)

இவ்வுரிமை வழக்கு அப்போது ஏற்படாமலே யிருந்தது; எம்மதத்தினரும் அப்பெருமானைத் திருமால் என்றே போற்றி வணங்கி வந்தனர். அங்ஙன மிருப்ப, இராமாநுசர் காலத்தே இவ் வழக்கு நிகழ்ந்தது ஏன்? எனில், வைகாநச அருச்சர்கள் அரசனுல் தண்டிக்கப் பெற்று வெறுப்புற்று வேங்கடவனுக்குப் பூசை முதலியன செய்யாமல் தவிர்ந்திருந்ததால் சைவர்கள் அச்சமயத்தைத் தங்கட்குப் பயன் படுத்தியும், *குலோத்துங்க சோழன் ஆழ்ந்த சைவப்பற்றுடையனுதலின், மற்றைய சமயங்களைத் தாழ்வுபடுத்தியும், அச்சமயங்களை மேற்கொண்டவர்களைத் துன்புறுத்தியும், மக்கள் பலர்க்குச் சைவசமயத்தில் ஊற்றம் உண்டாகுமாறு செய்தும் வந்தமையால், காளத்திச் சைவர்கள் அரசனது ஆதரவு தங்கள்பால் மிகுதியாக உளதென்று நினைத்தும், திருவேங்கடமுடையானை முருகன் எனவும், அம் முருகன் தவஞ்செய்யும் கோலத்துடனிருத்தலால் வேல் முதலிய படைகளில்லாதிருக்கின்றனர் எனவும் வழக்குரைத்தனர் என்பர்

இராமநுசர் இவ்வழக்கினைத் தீர்த்துத் திருவேங்கடமுடையான் திருமாலே என நிறுவுவாராயினர். முருகன் தவம் செய்ததாகக் கூறப்படும் இடம் குமாரதாரை என்னும் தீர்த்தக்கரையில் இருந்திருத்தல் கூடும். குன்றுதோருடும் குமரனது புகழைப் பாடிய அருணகிரியாரும் ஆழ்வார்களைப் போலவே, திருவேங்கட மலையில் உறையும் பெருமான் திருமாலேயெனத் தம் திருப்புகழிற் பாடியுள்ளார்.

---

*குலோத்துங்கன் ஆழ்ந்த சைவப் பற்றுடையனே யெனினும், திருவரங்கத்தில் விழாக்களுக்கும், பிரபந்தம் ஓதுதற்கும் கட்டளைகளை யமைத்தமையால் வைணவருக்குப் பகைவனல்லன் என்பது கல்வெட்டுக்களால் அறியப் படும்.

''உபசாந்த சித்த நுநுநுல
பலபாண்ட வர்க ந வரதனமை
உருவோன்ப்ர சிதத நெடியவன
ரிடிகேசன்
உலகின்ற பசசை புமையனான்
வடவேங்க டத்தி லுறைபவன்
உயர்சார்ங்க சக்ர கரதலன்''
மருகோனே.

(திருவாகு. திருப்பு. 175.)

என்றது காண்க.

கட்டியம் யாதவ நாராயணன், கட்டி தேவன் என்றும் கூறப்படுகின்றுன். இவன் இராமாநுசருடைய திருவடிகளைக் கிட்டி அவர் சீடனுகியபின் யாதவ நாராயணன் எனப்பெயர்பெற்றனன் போலும். திருமலையிலும் திருப்பதியிலும் செய்த கோயில் திருப்பணிகள் அனைத்துக்கும் இவனே துணை புரிந்தவன். தன் ஆசார்யர் கட்டளைகளைச் சிரமேற்கொண்டு முடித்த பெருமை இவனுக்குமிகுதியாக உண்டு.

திருமலையில் இராமாநுசர் செய்தருளிய திருத்தங்களும் புதியதாக ஏற்படுத்திய செயல்களும் பல. அவற்றுள், திருவேங்கட முடையானைச் சங்காழி தரிக்கச் செய்ததும், அவர் கோயில் கோபுரத்தில் உள்ள விமானத்தில் வைகானச ஆகமத்திற் கூறிய படியே வராக, நரசிம்ம, வேங்கடேச தேவதைகளை அமைத்து, அக்கோயில் திருமாலுக்கே உரியதென உலகிற்கறிவிக்கச் சம்புரோட்சணம் செய்வித்ததும், பெருமாள் திருமார்பில் திருமகளை இரு கைகளையுடைய திருவுருவோடு ஒரு நன்னுளில் அமைத்ததும், திருமஞ்சன காலத்தில் திருமகள் மார்பினின்றும் இழிந்திருக்கும்போது நாய்ச்சியார் திருமொழியை ஓதும்படி செய்ததும், திருமஞ்சனத்துக்குப் பின் பெருமாள் திருநெற்றியில் இரு கோடுகளான திருமண்காப்பைக் கருப்பூரப் பொடிகளால் அமைத்து மூன்று நாட்கள் காட்சியளிக்கவும், மற்றைய நான்கு நாட்களிலும் முத்துப் பொடிகளால் அமைத்துக் காட்சி யளிக்கவும், திருக்கண்மலருக்குக் குளிர்ச்சிக்காக



நவநீத கிருஷ்ணன்.
திரு கே சீதாராமன்-கோவை.

---

அஞ்சனக்காப்பு இடவும் ஏற்பாடு செய்ததும், திருமலையிலேயே புரட்டாசி விழாவைச் செய்யத் தகுதி வாய்ந்த முறையில திருவீதி யமைத்ததும், ஞானப்பிரானுக்கு விழா முதலியன இல்லாமற் செய்ததும், மலைகுனிய நின்ற பெருமானை உற்சவ மூர்த்தி யாக்கி அவர்க்குமுன் உற்சவ மூர்த்தியாய் இருந்த வேங்கடத்துறைவாரை (போகசீநிவாசன்) நிலைத்துள்ள மூர்த்தியாக்கியதும், தண்ணீர முது வழி திருத்தல், பூந்தோட்டத்தில் பெருமான் பூப்பறித்த விழா ஆகியவற்றை ஏற்படுத்தியதும், வேங்கடத்தரியைத் திருவேங்கடமுடையான் கோயிலிலேயே பிரதிட்டை செய்து வைத்ததும், திருவேங்கடமுடையானது இடக்கரத்திலும் வலக்கரத்தில் (வைகுண்டஹஸ்தம்) உள்ளதுபோலவே நாகாபரணத்தை (அரவப்பணி) அணிவித்ததும், திருமலையில் இருப்போர் மேற்கொள்ள வேண்டிய விதிகளை ஏற்படுத்தியதும் சிறந்தவை.

திருவேங்கடமுடையானது செல்வம் நாளுக்கு நாள் வளர்ச்சி யடைவதற்

காக அவர் ஒரு யந்திரத்தை மநதிர பூர்வமாக அமைத்து வைத்தமையால் அத்திருக்கோயிலின் செல்வம் என்றும் குறை படாது வளர்ந்து கொண்டே வருவதாகின்றது.

திருப்பதியில் கோவிந்தராசப் பெருமாளைப் பார்த்தசாரதி சுவாமி கோயிலில் திருப்பிரதிட்டை செய்ததும், அவர் வலப்பக்கத்தில் செங்கழுநீர்ப் பூவைத் தரித்த கையுடன் ஆண்டாளைப் பிரதிட்டை செய்ததும், இருவர்க்கும் விழா முதலியவை செய்வதற்குரிய ஏற்பாடுகளையும், மண்டபம், கோபுரம் முதலிய கட்டுவித்தலையும் கட்டியம் யாதவராயன் துணைகொண்டு செய்வித்தும், திருவேங்கடமுடையானும் கோவிந்தராசனும் வேறுபாடின்றி ஒருவரெனவே கருதுமாறு பல கட்டளைகளை அமைத்ததும் சிறந்தவை.

கோவிந்தராசன் தில்லையில் திருச்சித்திர கூடத்தில் கிடந்த திருக்கோலத்தோடு அன்பர்களுக்குக் காட்சியளித்துக் காத்து வந்தவர். சமய ஊற்றத்தின் காரணமாக முதற் குலோத்துங்கன் அப்பெருமானைக் கடலுள் ஏறியச் செய்து ''அவர்க்கு இடம் கடலே யாதலின் அவர் அங்கிருத்தலே நலம்'' எனக் கூறி, தில்லையிலிருந்த சில வைணவர்களைத் துன்புறுததி வந்தான். இதனால், இவ்வரசனை வைணவர்கள் பெயர் கூறத்தகாதவன் என்று வெறுத்து அவன் இறுதிக் காலத்தில், தான் செய்த அடாச் செயல்களின் பயனாய்க் கழுத்தில் இராச பிளவை என்னும் கட்டியால் துன்புற்றுப் புழுக்கள் நிறையப் பெற்று வருந்தி இறந்தானாதலின், அவனைக் கிருமிகண்டன் என அழைக்கத் தொடங்கினர்.

இரண்டாம் முறையாக இராமாநுசர் திருமலைக் கெழுந்தருளித் திருப்பதியில் தங்கி யிருந்த காலத்தில் சில வைணவர்கள் கோவிந்தராசரின் உற்சவ விக்கிரகத்தை எடுத்துக் கொண்டு அங்கு வந்து நடந்த செய்திகளை அவரிடம் புகன்றனர். அதனை யுணர்ந்த இராமாநுசர் மிகவும் வருந்திச் செய்வது யாதென ஆராய்ந்தார். பின்னர் ஒரு முடிவுக்கு வந்து, திருப்பதியே அரசன் இடையூற்றுக்கு இலக்காகாத இடம் எனக் கருதியும்,

''தென்தில்லைச் சித்திர கூடத்தென்
செல்வனை
மின்னி மழைதவழும் வேங்கடத்
தென் வித்தகனை''
(பெரிய திருமடல்)

என்று திருமங்கை யாழ்வார் திருவேங்கட முடையானுக்கும் கோவிந்தராசனுக்கும் ஒற்றுமை தோன்ற அருளிச் செய்திருக்கும் கருத்தினை உய்த்துணர்ந்து, அதனை நிறைவேற்றுதல் தக்கது என எண்ணியும் அவ்வுருவத்தைத் திருப்பதியில், ஏற்கெனவே நிலைபெற்றிருந்த பார்த்தசாரதி சுவாமியின் கோயிலில் அவருக்கு வலப்புறத்தில், தன் சீடனாகிய யாதவராயனைக் கொண்டு மண்டபமும் கர்ப்பக்கிருகமும் கட்டச்செய்து அங்கே திருப்பிரதிட்டை செய்தருளினார். பார்த்தசாரதியின் திருவுருவம் சிதைவுபட்டதனால் அதற்குப் பூசை நைவேத்தியம் முதலியன இல்லாமற் போகவே, கோவிந்தராசனுக்கு எல்லாவிதமான உபசாரங்களும் விழாக்களும் நடைபெறுவன வாயின. இவற்றிற்கு இராமாநுசரே காரணமாவார்.

கட்டியம் யாதவராயன் செய்துள்ள கோயில் திருப்பணிகள் பல. அவற்றுள் கோவிந்தராசப் பெருமாள் கோயிலின் இரண்டாவது கோபுரமும் ஒன்று. அதற்கு யாதவ நாராயணன் திருக்கோபுரம் என்றும், பெரிய திருக்கோபுரம் என்றும், கல்வெட்டுக்களில் பெயர்கள் காணப்படுகின்றன.

''யாதவ நாராயண திருக்கோபுரத்துத் திருவாழியாழ்வான்'' (T. T. Ins. Vol No 4. No. 144.)

''பெரிய திருக்கோபுரத்துத் திருவாழியாழ்வான்'' (No. 22, 154. G.T.) என வருவன காண்க. இத் திருக்கோபுரமே அப்பொழுது பெரிதாக விருந்ததால் பெரிய திருக்கோபுரம் எனப்பட்டது. பினனர் கி. பி. 1628-ல் மட்லகுமார அநந்தராஜா என்பவன் வெளியே உள்ள திருக்கோபுரத்தைக் கட்டினான். (T. T. Ins 269-270) அதன் பிறகு யாதவ

நாராயணன் திருக் கோபுரம் சிறிய தாயிற்று. இக்கோபுரத்தில் உள்ள திருவாழி யாழ்வானுக்கு மேல் மண்டபமும் கீழ் மண்டபமும் கந்தாடை ராமாநுஜ ஐயங்காரால் கட்டப் பட்டுத் திருவாழி யாழ்வான் திரு நட்சத்திரத்தில் (கார்த்திகை) திரு வமுது செய்வதற்குப் பல கட்டளைகள் ஏற்பாடு செய்யப்பட்டன. (T. T. Ins Vol. 4. No. 114. 27-11-1538.)

இனி, கோவிந்தராசரைத் திருப் பதியில் இராமாநுசர் திருப்பிர திட்டை செய்த காலத்தைக் குறித்துக் கருத்து வேறுபாடுகள் உள்ளன. திருப்பதி வரலாற்றாசிரியர்களுள் திரு. டாக்டர். K. S. கிருஷ்ணசாமி ஐயங்கார் அவர்கள் கி. பி. 1135-ல் இது நிகழ்ந்த தெனவும், திரு. T.K.T. வீரராகவாச்சாரியார் அவர்கள், கி. பி. 1130-ல் நிகழ்ந்த தெனவும் கூறுகின்றனர்.

ராமாநுஜார்ய திவ்ய சரிதையில்,

'' அம்பொற் குடைச்சகன் ஆயிரத் தொன்ப
தாம்வருடத் துத்தென்பால் சென்னி குலோத்துங்கன்
சித்திரகூடத்துச் செங்கண்மால் தன்னை
அலையெறிந்த நாள்தான் அறி''

என்றொரு வெண்பாக் காணப்படுகின்றது. தலை முதலியவை சிதைந்துள வேனும், குலோத்துங்கன் கோவிந்த ராசரைக் கடலில் எறிந்தது சகாப்தம் 1009-என்பது (கி. பி. 1082) இதனால் அறியப்படும். அதற்குப் பின்னரே இப்பிரதிட்டை இரண்டோராண்டு களுக்குள் நிகழ்ந்திருத்தல் வேண்டும். ''இராமாநுசர் தம் நாற்பதாவது வயதில் திருமலை-திருப்பதி ஆகிய ஈரிடங்களிலும் தாம் செய்ய வேண்டிய ஏற்பாடுகளைச் செய்து முடித்துவிட்டுத் திருவரங்கம் சென்றருளினார்'' என்று 'திருமலை ஒழுகு' கூறுகின்றது. அவர் அவதாரம் கி. பி. 1017. ஆனால், இவ்வேற்பாடுகள் 1057-க்குள் முடிந் திருத்தல் கூடும். எனினும் கோவிந்த ராசரைப் பிரதிட்டை செய்த ஆண்டு சௌமிய வென்றும் பங்குனி மாதத்துப் பௌர்ணமி உத்திர நட் சத்திரம் திங்கட்கிழமை கூடிய நாள் என்றும் சொல்லப் படுகின்றன. இந்த இயைபுடைய நாள் கி. பி. 1130-ல் வருவதால், கோவிந்தராசரை அவ் வாண்டில் பிரதிட்டை செய்திருக்க வேண்டுமென்றும், அதுவரை அந்தத் திருவுரு திருப்பதியில் பிரதிட்டை யின்றியே இருந்த தென்றும், முதற் குலோத்துங்கன் கி. பி. 1120-ல் இறந்த பின், திருப்பதியில் கோயில் கட்டி அதில் கோவிந்தப் பெருமானது திருவுருவை நிறுவுதற்கு இயன்றது என்றும் கூறுவர்.

இத்தகைய கூற்றுக்களுக்கு வேறு சிறந்த சான்றுகள் கிடைக்காமை யால், பலர் கருத்துக்களை மட்டும் எடுத்துக் காட்டுவதோடு அமைய வேண்டிய நிலை ஏற்படுகின்றதே யன்றித் துணிந்து கூறுதற்கியல வில்லை. இராமாநுசர் மேற்கொண்ட இச்செயலுக்குத் துணையா யிருந்த வனாகக் கூறப்படும் கட்டியம் யாதவ ராயன் காலம் கி. பி. 12-ம் நூற்றாண் டின் தொடக்கம் என்பது, நெல்லூர்க் கல்வெட்டு ஒன்றால் அறியப்படுகின் றது. ''யாதவராயன் கட்டி தேவ ராசன் பிரதானி ராஜராஜ தேவர்க்கு யாண்டு 11-வது'' என்பது அது: இங்குக் கூறப்பட்ட ராஜராஜன் II கி. பி. 1133-முதல் 1163 வரையில் ஆண்டவன். அவன் காலத்திலும் அவனுக்கு முன்னும் இவ் யாதவ ராயன் திருவேங்கட நாட்டைச் சோழர்க்கு அடங்கிய சிற்றரசனாய் ஆண்டிருந்தவன் என்பது தெளிவு. எனவே, கோவிந்தராசர் பிரதிட்டை கி. பி. 12-ம் நூற்றாண்டின் தொடக் கத்தில் நிகழ்ந்திருத்தல் வேண்டுமென் னும் முடிவை யாவரும் உடன்படுவர் என்பதற்கு ஐயமில்லை. (தொடரும்)

# தி. தி. தேவஸ்தான தமிழ் சமய வெளியீடுகள்

| | ரூ. | பை |
|---|---|---|
| அஷ்டோத்ர சகஸ்ரநாம அர்ச்சனை ... | 1 | 00 |
| பாலசரிதம் (திரு. ஆர். ஸ்ரீநிவாச ராகவாச்சார்யா) ... | 0 | 75 |
| பால பாகவதம் (செவ்வைச் சூடுவார்) முதல் பாகம் ... | 4 | 00 |
| ,, ,, இரண்டாம் பாகம் ... | 4 | 00 |
| தசரூபகம் (திரு. ஆர். ஸ்ரீநிவாச ராகவாச்சார்யா) ... | 3 | 50 |
| குருபரம்பரை (திரு. கே. பாலசுந்தர நாயக்கர்) ... | 3 | 00 |
| திருமலை வழிகாட்டி ... | 0 | 25 |
| ஸ்ரீ வேங்கடேஸ்வரர் மகாத்மியம் (தலபுராணம்) ... | 2 | 00 |
| ஸித்தாந்த த்ரய சங்க்ரஹம் (திரு. ஓ. வி. கபிஸ்தலம் தேசிகாச்சார்யா) ... | 2 | 50 |
| ஸ்ரீராமஜெயத் திருப்புகழ் பகுதி I, பகுதி II. (Each) (திரு. கே. பாலசுந்தர நாயக்கர்) ... | 3 | 00 |
| சர்வ தேவதா பூஜா விதானம் — தி. தி. தே — ... | 0 | 70 |
| ஸுப்ரபாதம் (பொருளுடன்) ,, ... | 0 | 50 |
| ஸுப்ரபாதம் ,, ... | 0 | 12 |
| செம்பொருள் (எஸ். கிருஷ்ணவேணி அம்மையார்) ... | 1 | 50 |
| ஸ்ரீநிவாச கல்யாணம் (வண்ணப்படங்களுடன்) ... | 11 | 50 |
| திருக்குறள் (பொருட்பால்) திரு.டி.பி. பழனியப்பபிள்ளை ... | 7 | 50 |
| ,, (காமத்துப்பால்) (தொகுத்தவர்) ... | 4 | 00 |
| திருவாய்மொழி (விளக்கவுரையுடன்) பாகம் 1 ... | 7 | 50 |
| (திரு. டி. பி. பழனியப்ப பிள்ளை) பாகம் 2 ... | 10 | 50 |
| யாப்பொளி (திரு. ஆர். ஸ்ரீநிவாச ராகவாச்சார்யா) ... | 3 | 50 |
| ஸ்ரீ கபிலேஸ்வர சுவாமி ஸுப்ரபாதம் (திரு. எம். வி. ராமநாத கனபாடிகள் ... | 0 | 20 |
| நித்யானுஸந்தானம் — தி. தி. தே — ... | 3 | 75 |
| ஏழுமலை யாத்திரை (திரு. டி. கே. நாராயணன்) ... | 4 | 00 |
| சித்திர ஸுப்ரபாதம் (வண்ணப்படங்களுடன்) தி தி.தே - ... | 8 | 00 |

## விற்பனைச் சலுகை விவரங்கள்

தி. தி. தேவஸ்தான கல்வெட்டு அறிக்கைகள், தி. தி. தேவஸ்தான கல்வெட்டுத் தொகுதி 1 மற்றும் தொகுதி 5 ஆக மூன்று நூல்களுக்கு, செட்டாக வாங்குவோர்க்கு, 12½% தள்ளுபடி வழங்கப்படும்.

'ஸ்ரீ அன்னமாச்சார்யா சங்கீர்த்தனமுலு' மற்றும் 'தாள்ளபாக்கா பணிகள்' ஆகிய 6 தொகுதிகளை (தெலுங்கு) ஒருமித்துவாங்கினால் 12½% தள்ளுபடி வழங்கப்படும்.

ரூ. 100 அல்லது அதற்கு மேற்பட்டு விளங்கும் விற்பனைக்கு 12½%, ரூ. 500/- லிருந்து ரூ. 1000/- வரை விளங்கும் விற்பனைக்கு 20%, ரூ. 1000/-க்கு மேல் இருக்கும் விற்பனைக்கு 30% என்றவாறு கமிஷன் வழங்கப்படும். ரூ. 100/-க்கு மேற்பட்டு சரக்காணைகள் விளங்கினால், அவற்றிற்கான தபால் செலவினை தி. தி. தேஸ்வதானம் ஏற்கும்.

ஆசிரியர்,
தி. தி. தேவஸ்தானம்
(தி தி. தே. பிரஸ் காம்பௌண்டு) திருப்பதி.

(6-ம் பக்கத் தொடர்ச்சி)

ராஜபத ஸ்தோத்திரம் என்னும் நூலிலே "வ்ருத்தோத்புல்ல விசாலாக்ஷம்" என்று சுருக்கமாய் வர்ணனம் செய்துள்ளான்.

ஆழ்வார்களுக்கு சேவை தந்தருளிய தனது அழகிய சிங்க உருவை ஆண்டாளுக்கும் திருவேங்கட மலையில் கோயில் கொண்டுள்ள நரசிங்கன் காண்பித்துத் தன்பால் அவளுக்கு ஆராக்காதலை விளைவித்தான். அவன் பிரிவினால் மெலிந்து போன பிராட்டி வடவேங்கடத்து மாமுகில்களைத் தூது விடுகிறாள். அவளது பாசுரம் இது:

"வான்கொண்டு கிளர்ந்தெழுந்த
மாமுகில்காள் வேங்கடத்துத்
தேன் கொண்ட மலர்சிதறத் திரண்
டேறிப் பொழிவீர்காள்!
ஊன்கொண்ட வள்ளுகிரலிரணி
யனையுடலிடந்தான
தான்கொண்ட சரிவளைகள்தருமாகில்
சாற்றுமினே"

ஆகாசத்தை அளாவி மேலே கூட்டம் கூட்டமாய் கிளம்பி வேங்கடத்திற் சென்று, தேனுள்ள மலர்கள் மரங்களிலிருந்தும் கொடிகளிலிருந்தும் கீழே சிதறும்படி பொழிகின்ற ஓ பெருமேகங்களே! கூர்மையான நகங்களால் இரணியன் மார்பகத்தைக் கிழித்த சிங்கப்பிரான் எனக்குக் காதலைத் தன் பால் ஏற்படுததிப் பிரிவாற்றாமையாலே மெலிநது கைவளைகளைக் கழண்டு விழும்படி செய்ததை அவனுக்கு நீங்கள் உரைத்து, அந்தச் சரிவளைகளை மறுபடியும் தருமாறு அவனிடத்தில் செப்புமின் என்று மேகங்களை வேண்டிக் கொண்டபடி. திருவேங்கடத்து ஆளரியின் அழகு வடிவை ஆழ்வார்கள் அனுபவித்தபடி யாமும் கண் குளிரக் கண்டு அவ் அழகிய வடிவில் முழு மனதுடன் ஈடுபடுவோமாக.



# செய்திச் சுருக்கம்

## புதிய அலுவலகக் கட்டிடம்

20–4–79 அன்று, திருப்பதியில் ரூ. 62 இலட்சம் செலவில் கட்டப் பட்ட தி. தி. தேவஸ்தான நிருவாக அலுவலகத்தின் புதிய கட்டிடம், ஆந்திர மாநிலத்தின் திட்டம் மற்றும் அற நிலையஅமைச்சர் திரு. வி. வெங்கடநாராயணு அவர்களால் திறந்து வைக்கப் பட்டது. இதனை ஒட்டி அன்று மாலை ஏற்பாடு செய்யப்பட்ட விழாவிற்கு வருகை புரிந்த கூட்டத்தினரை, தி. தி. தேவஸ்தான செயலாட்சித் தலைவர் திரு. பி. வி. ஆர். கே. பிரஸாத் அவர்கள் வரவேற்றுப் பேசுகையில் இப்புதிய கட்டிடத்தின் முக்கியத்துவத்தைப் பற்றி விளக்கிப் பேசினூர். விரைவான எளிய நிருவாகத்திற்கு பெரிதும் உதவும் இப்புதிய கட்டிடம் யாத்திரிகர்களுக்கும் பலவகைகளிலும் பயனுக அமையும் என்று குறிப்பிட்டு, சுமார் 11,000 சதுர மீட்டர் நிலத்தில் கட்டப்பட்டிருக்கும் இக்கட்டிடத்தின் ஒரு தளத்தில் சமயம் சம்பந்தப் பட்ட நூல் நிலையம் ஒன்றும் செயற்பட உள்ளதும் என்றும் கூறினூர். அடுத்து விழாவிற்குத்தலைமை வகித்து உரையாற்றிய தி. தி. தேவஸ்தான பொறுப்பாண்மைக் குழுத்தலைவர் டாக்டர் என். ரமேஸன் அவர்கள் தம் தலைமையுரையில், தி. தி. தேவஸ்தான ஊழியர்கள் தங்கள் - பணி நேரத்து தாங்கள் ஒரு புனிதமான சமய நிறுவனத்தின் மேம்பாட்டிற்காக பணி புரிகின்ருேம் என்ற எண்ணம் தோன்றும் வகையில் இப்புதிய கட்டிடம் ஓர் ஆன்மீகச் சிந்தனையை தூண்டிவிடும் வகையில் விளங்கிட வேண்டிய தன் அவசியத்தைக் குறிப்பிட்டு, மேலும் அன்னமாச்சார்யா கீர்த்தனைகளின் பெருமையைக் குறிப்பிட்டு, செப்பேடுகளில் உள்ள அக்கீர்த்தனைகளை இரண்டாண்டுகளுக்குள் நூல் வடிவில் வெளியிட தேவஸ்தானம் எல்லா முயற்சிகளையும் மேற்கொள்ளவேண்டும் என்று கூறினூர். தொடர்ந்து பேசுகையில் அன்னமாச்சார்யா கீர்த்தனைகளின் பெருமையைப் பரப்பும் வகையில், தேர்ச்சி பெற்ற இசைக் கலைஞர்கள், வாய்ப்பு ஏற்படும் போதெல்லாம் அக்கீர்த்தனைகளை தங்கள் கச்சேரிகளில் பாடிப் பரப்புதல் வேண்டும் என்றும் கேட்டுக் கொண்டார்.

பின்னர் தி. தி. தேவஸ்தான ஆஸ்தான வித்வான்களாக அண்மையில் நியமிக்கப்பட்ட திரு. நேதநூரி கிருஷ்ணமூர்த்தி அவர்களும், திரு. லால்குடி ஜெயராமன் அவர்களும் மேடையில், அமைச்சரவர்களால் தங்கப்பதக்கம் அளிக்கப்பெற்று கௌரவிக்கப்பட்டனர். தொடர்ந்து இப் புதிய கட்டிடத்தில் செயற்படவுள்ள 100 இணைப்புகளைக்கொண்ட தொலைபேசி 'எக்ஸ்சேஞ்சு' ஒன்றினை திறந்து வைத்தார். பின்னர் தம் சிறப்புரையில், யாத்திரிகர்களின் பிரச்சனைகளை மனதிற்கொண்டு, தேவஸ்தான ஊழியர்கள் முழு மனத்துடன் பணிபுரிதல் வேண்டும் என்று கேட்டுக்கொண்டார். இறுதியில் தி. தி. தேவஸ்தான உதவி செயலாட்சித்தலைவர் திரு. என். நரசிம்மாராவ் அவர்கள் நன்றி நவின்ருர். இவ்விழா ஒட்டி, அன்று மாலை 6 மணி அளவில் திரு. நேதநூரி கிருஷ்ணமுர்த்தி அவர்களின் இன்னிசைக் கச்சேரி ஒன்று நடைபெற்றது. திரு. லால்குடி ஜெயராமன் அவர்கள் வயலினும், வேலூர் ஜி. ராமபத்திரன் அவர்கள் மிருதங்கமும் இசைத்தனர். அன்று இரவு ஏழைகளுக்கு அன்னதானம் வழங்கப்பட்டது.

## புதிய வங்கிக் கிளை

திருப்பதியில் புதிதாகக் கட்டப்பட்டுள்ள தி. தி. தேவஸ்தான நிருவாகக் கட்டிட அரங்கில் 17-4-79 அன்று 'ஸ்டேட் பாங்க் ஆப் இந்தியா'வின் புதிய கிளை அலுவலகம் ஒன்று தி.தி. தேவஸ்தான செயலாட்சித் தலைவர் திரு. பி. வி. ஆர். கே. பிரஸாத் அவர்களால் திறந்து வைக்கப்பட்டது.

## ஸ்ரீ அன்னமாச்சார்யா

ஸ்ரீ வேங்கடேஸ்வரரின் பக்தரும் கி.பி.15 ஆம் நூற்ருண்டைச் சார்ந்தவரும் தெலுங்குக் கவிஞருமான ஸ்ரீ அன்னமாச்சார்யா பிறந்த ஊரான, ஆந்திர மாநிலம் கடப்பை மாவட்டத்திலுள்ள தாள்ளபாக்கம் எனும் கிராமத்தினை, அன்னமய்யாவின் நினைவாகவும், அவர் இயற்றிய 32,000 கீர்த்தனைகளின் பெருமையை பரப்பும் வகையிலும் 4-4-79 அன்று தி. தி. தேவஸ்தானம் தத்து எடுத்துக்கொண்டது. இதனை ஒட்டி தாள்ளபாக்கத்தில் நடைபெற்ற விழாவில் துவக்கவுரை ஆற்றிய தி. தி. தேவஸ்தான செயலாட்சித் தலைவர் திரு. பி. வி. ஆர். கே. பிரஸாத் அவர்கள் அன்னமய்யாவின் கீர்த்தனைகளில் பொதிந்து கிடக்கும் பக்திச் சுவையின் சிறப்பினை விளக்கிக் கூறி, அவருடைய கீர்த்தனைகளில் இருக்கும் இலக்கியச் சிறப்பினை வெளிக்கொணரும்வகையில் திருப்பதி ஸ்ரீ வேங்கடேஸ்வரா பல்கலைக் கழகத்தில் இதற்கென ஒரு தனித்துறை செயல்பட இருப்பதைத் தெரிவித்தார். அன்னமாச்சார்யா திட்டத்தின் சிறப்பு அலுவலர் திரு. கே. ஸ்ரீநிவாசலு செட்டி அவர்கள் அன்னமாச்சார்யா படைப்புக்களின் இலக்கியச் சிறப்பினை பல எடுத்துக் காட்டுக்களுடன் விளக்கிப்பேசினூர். தி.தி. தேவஸ்தான பொறுப்பாண்மைக் குழு உறுப்பினர் திரு. ஜி. சந்திரசேகரம் நாயுடு அவர்கள் இவ்விழாவிற்குத் தலைமை தாங்கி உரையாற்றினூர்.

## திருமண மண்டபம்

ரூ. 5. 13 இலட்சம் செலவில் காளஹஸ்தியில் கட்டப்பட்ட தி.தி.தேவஸ்தானத்தாரின் திருமண மண்டபத்தினை, ஆந்திர மாநிலத்தின் திட்டம் மற்றும் அறநிலைய அமைச்சர் திரு. வி. வெங்கடநாராயணு அவர்கள் 21-4-79 அன்று திறந்து வைத்தார். தி. தி. தேவஸ்தான பொறுப்பாண்மைக்குழு உறுப்பினர் திரு. மாதவராவ் அவர்கள் கூட்டத்தினரை வரவேற்க, தி. தி. தேவஸ்தான செயலாட்சித் தலைவர் திரு. பி. வி. ஆர். கே. பிரஸாத் அவர்கள் விழாவிற்குத் தலைமை வகித்தார்.

## நியமாத்யயன திட்டம்

கீழ்வரும் நியமாத்யயன திட்டம் தி. தி. தேவஸ்தான பொறுப்பாண்மைக்குழுவினுல் அங்கீகரிக்கப்பட்டுள்ளது. ரூ. 2.5 இலட்சம் செலவில், 'திருமலை திருப்பதி தலைமுறைநியமாத்யயன வேத வேதாங்க வித்யார்த்தி ரக்ஷணதிட்டம்' என்றபெயரில் செயற்படுத்தப்படும் இத்திட்டத்தின் கீழ் ஆந்திராவைச் சார்ந்த 10 மாணவர்

களுக்கு பயிற்சி அளிக்கப்படும். இத் திட்டத்திற்காக வழங்கப்படும். வெளி யார் வழங்கும் சன்மானங்கள் அல்லது அறக்கொடைகள் கொண்டு மேலும் பலமாணவர்களுக்குப்பயிற்சி அளிககப் படும். அதாவது இத்திட்டத்திற்காக செலவழிக்கப்படும் தொகையானது மாணவர்களுக்கு ஊக்க ஊதியம் மற் றும் ஆயுள் வரை நிதி வழங்குவது போன்றவற்றிற்கு ஒதுக்கப்படும். பயிற்சி காலம் இருபாகங்களாக பிரிக் கப்பட்டு, முதல் பாகத்தின் கீழ் 14 ஆண்டுகள் வேதங்கள், கிருஹ்ய சூத் திரங்கள், கணிதம் ஆகியவற்றிலும், இரண்டாம் பாகத்தின் கீழ் 4 ஆண்டு கள் வேதாங்கங்களிலும் பயிற்சி அளிக் கப்படும் இத்திட்டத்தின் கீழ் சேர்த் துக் கொள்ளப்படும் மாணவர்கள் முதல்பாகம் அல்லது இரண்டு பாகங்க ளிலும் பயிற்சி மேற்கொளல்வேண்டும். முதல் பாகத்தில் தேர்ச்சி பெற்றவர்க ளே இரண்டாம்பாகத்திற்கு சேர்த்துக் கொள்ளப்படுவர். பயிற்சி காலத்தின் போது ஒவ்வொரு மாணவருக்கும் மாதத்திற்கு ரூ. 50/- ஊக்க ஊதிய மாக வழங்கப்படும். முதல் பாகத்தில் தேர்ச்சி பெற்ற ஒவ்வொரு மாணவ னுக்கும் ரூ. 200/- ம், இரண்டாம் பாகத்திலும் தேர்ச்சி பெற்ற ஒவ் வொரு மாணவருக்கும் மேலும் ரூ. 50/-ம் ஆயுள் முழுவதும், மாதந் தோறும் வழங்கப்படும், மேலும் தேர்ச்சி பெற்ற மாணவர்களில் ஒரு வருக்கோஅல்லது ஒன்றுக்குமேற்பட்ட வர்களுக்கோ, அவர்களுடைய குடும் பத்தின்பின்னணியை மனதிற்கொண்டு முதல் பாகத்தை முடித்தவர்க்கு ரூ. 3000-/ம் இரண்டாம்பாகத்தை முடித் தவர்க்கு ரூ. 2000/-ம் வழங்கப்படும். விண்ணப்பங்களுக்கும், முழு விவரங்க ளுக்கும் "செயலாட்சித் தலைவர், தி.தி. தேவஸ்தானம், திருப்பதி" எனும் முகவரியுடன் தொடர்பு கொள்ள வேண்டும்.

## ஆஸ்தான வித்வான்கள்

திரு. சந்தியாவந்தனம் ஸ்ரீநிவாசராவ் அவர்கள் சங்கீதத்திலும், திரு. பாபு அவர்கள் சித்திரத்திலும் ஆஸ்தான வித்வான்களாக தி. தி. தேவஸ்தானத் தாரால் நியமிக்கப்பட்டுள்ளனர்.

## படி விழா

திருப்பதி திருமலை 10-ம் ஆண்டு திருப்படி திருவிழா நிகழ்ச்சிகள் 13-4-79 அன்று மாலை 6 மணிக்கு திருபபதி அன்னமாச்சார்யாகலாமந்தி ரத்தில் தேவஸ்தான செயலாட்சித் தலைவர் திரு. பி.வி.ஆர்.கே. பிரஸாத், ஐ. ஏ. எஸ். அவர்கள் தலைமையில் நடைபெற்றன.

திருப்பதி படிவிழா சங்க பொதுக் காரியதரிசி ஆர்க்காடு திரு. நரசிம்மன் அனைவரையும் வரவேற்றுப் பேசுகை யில், படிவிழா சங்கத்திற்குச் சில சலு கைகள், வசதிகள் அளிக்க வேண்டு மென செயலாட்சித் தலைவர் அவர் களைக் கொண்டு அவைகளைக் குறிப் பிட்டுச் சொன்னர்.

திரு. பிரஸாத் அவர்கள் பேசுகையில் எடுத்த காரியத்தை திறமையாக முடிக் கக் கூடிய-திறமையான சுறுசுறுப்பு மிக்க காரியதரிசியை பெற்றுள்ள திருப்பதி படிவிழா சங்கம் இன்னும் அதிக அளவில் மேன்மேலும் சிறப்பாக வளரும் என்று வாழ்த்தி, அவர் குறிப்பிட்ட நியாயமான தேவை களுக்கு தேவஸ்தானம் தன்னாலியன்ற உதவிகளை வழங்கும் என்று உறுதி கூறினர்.

மறுநாள் காலை மலை அடிவாரம் வந்து கற்பூரம் ஏற்றி தேங்காய் உடைத்து, நாதஸ்வர மங்கள இன் னிசை முழங்க, திரு. டி. எஸ். அனந்த நாராயண அடிகளாரும் பல ஊர்களி லிருந்தும் வந்திருந்த ஏராளமான பஜனைக் குழுவினர்களும், பக்தர்களும் பிரமுகர்களும் புடைசூழ திருப்பதி படி விழாவை திரு. பிரஸாத் அவர் கள் துவக்கி வைத்து, அவரும் சிறிது தூரம் நடந்து வந்தார். எழுத்தாளர் 'நஜன்' மற்றும் பலரும் கலநது கொண்டனர்.

திருமலையை அடைவதற்கு முன்பே, திருமலை உதவி செயலாட்சித் தலைவர் திரு. முனிசாமிநாயுடு, வரவேற்பு அலு வலர் ஆகியோர் பக்தர்களைவரவேற்று, படியேறி வந்த அனைவருக்கும் தேவஸ் தான பிரசாதங்களை வழங்கினர்கள். அன்று மாலை 6 மணிக்கு திருமலையில், 2 யானைகள் முன்செல்ல நாதஸ்வர வித்வான்கள் மின்னல்-நரசிம்மன், ஆறுமுகம் குழுவினரின் மங்கள வாத் யத்தோடு, நாற்பத்துக்கு மேற்பட்ட பஜனைக் குழுவினர்களும் ஆயிரத்திற் கும்மேற்பட்ட அடியார்களும் பக்திப் பாடல்களைப் பாடியவாறு செல்ல ஏழு மலையானின் மாடவீதி உலா உற்சவம் மிகச் சிறப்பாக நடைபெற்றது.

சதஸ் மண்டபத்தில் இரவு 10 மணி வரை பஜனை நடைபெற்றது. அதன் பிறகு இரவு 12 மணிக்கு படிவிழாவில் கலந்து கொண்டவர்கள் அனைவரும் ஏழுமலையானைத் தரிசித்து அவனருள் பெற்றபின், பத்தாம் ஆண்டு திருப்பதி படிவிழா நிகழ்ச்சிகள் இனிது முடிந் தன.

[தகவல்: திருப்பதி திருமலை
படிவிழா சங்கம்]



## சந்தாதாரர்களுக்கு...

30-6-79-ம் தேதியுடன் சந்தாக்காலம் முடிவடையும் சந்தாதாரர்களின் எணகள் கீழே கொடுக்கப்பட்டுள்ளன; ஆகவே அவ்வெணகள் உடைய சந்தாதாரர்கள் தங்கள் சந்தா எண்களைக் குறித்துக் கொண்டு தாங்கள் செலுத்த வேணடிய தொகையைச் செலுத்தி தங்கள் சந்தாவைப் புதுப்பித்துக் கொள்ளவும். T

57, 62, 252, 273, 384, 496, 521, 524, 1041, 1188, 1209, 1218, 1234, 1238, 1883, 1906, 1951, 1952, 1954, 1956, 1961, 1963, 1963, 1975, 1977, 1980, 2047, 2066, 2738, 2739, 2740, 2741, 2742, 2744, 2745, 2746, 2748, 2749, 2750, 2751, 2752, 2753, 2755, 2757, 2765, 2791, 2885, 3175.

# ராசிபலன்

(1-5-79 முதல் 31-5-79 வரை)

டாக்டர் டி: அர்க்கசோமயாஜி, M.A., Ph.D.
திருப்பதி:

## மேஷம்

(அசுவனி, பரணி, கார்த்திகை முதல பாதம் முடிய)

ராகுவினுல் கவலைகள்; சனியினுல் கருத்து வேறுபாடுகள் அல்லது பண நஷ்டம் அல்லது தன் பிள்ளைகள் அல்லது பெண்களினுல் கவலைகளுக் குள்ளாதல்; குருவினுல் உறவினர்கள் அல்லது மற்றக் காரணங்கள் முன் னிட்டு கவலைகளுக்குள்ளாதல்: செவ் வாயினுல் பண நஷ்டம்; சுக்ரனுல் மாதத்தின் 12-ம் தேதிவரை எந்தவித மாற்றமுமில்லை. ஆனுல் பிறகு கேளிக்கைகளில் ஈடுபடுதற்குரிய சூழ் நிலை ஏற்படல்; சூரியனுல் மாதத்தின் முதல் 15 நாட்களின்போது பண நஷ்டம் அல்லது ஏமாற்றப்படல் அல்லது கண் சம்பந்தப்பட்ட நோயி னுல் அவதியுறல்; புதனுல் கருத்து வேறுபாடுகள் அல்லது பண நஷ்டம் அல்லது மதிப்புக் குறைதல்.

## ரிஷபம்

(கார்த்திகை 2-ம் பாதம் முதல், ரோகிணி, மிருக சீரிஷம் 2-ம் பாதம் முடிய)

ராகுவினுல் கருத்து வேறுபாடுகள்; சனியினுல் பண நஷ்டம் அல்லது நட்பு முறிவு அல்லது உற்ருர் உறவினர் களுடன் பிரிவு; குருவினுல் ஏமாற்றங் கள்; செவ்வாயினுல் மாதத்தின் ஏழாம் தேதி வரை வெற்றி ஆனுல் இறுதியில் பண நஷ்டம்; சூரியனுல் பதினைந்தாம் தேதி வரை எந்தவித மாற்றமும் கிடையாது ஆனுல் இறுதி யில் பொருள் நஷ்டம் அல்லது பிர யாணம் அல்லது வயிறு சம்பந்தப்பட்ட நோயினுல் அவதியுறல்; புதனுல் 7-ம தேதி வரை பண வரவு, மனமகிழ்ச்சி, ஆனுல் இறுதியில் உடல் நலம் கெடல் பிறகு 23-ம் தேதி வரை எதிரிகளால் மதிப்புக்குறைதல் அதன் பிறகு தவ ருன ஆலோசனைகளைக் கேட்டதன் பேரில் ஏற்படும் கருத்து வேறுபாடு களினுல் மறுபடியும் பண நஷ்டம்; சுக்கிரனுல் 12-ம்தேதி வரை பணவரவு புதிய நட்புறவுகள், ஆனுல் இறுதி யில் எந்தவிமான நன்மை தீமைகளும் ஏற்படாது.

## மிதுனம்

(மிருக சீரிஷம் 3-ம் பாதம் முதல், திருவாதிரை, புனர் பூசம் 3-ம் பாதம் முடிய)

ராகுவினுல் பண வரவு; சனியினுல் உடல் நலம் மேன்மை, குடும்பத்தில் மகிழ்ச்சி; குருவினுலும் பண வரவு; சூரியனுல் முதல் 15 நாட்களின்போது பண வரவு, வெற்றி, மதிப்பு உயர்தல் ஆனுல் இறுதி நாட்களின்போது எந்த வித மாற்றமும ஏற்படாது; சுக்ரனுல் 12-ம் தேதி வரை கருத்து வேறுபாடு கள் மதிப்புக் குறைதல், ஆனுல் இறுதியில் பண வரவு, புதிய நண்பர் கள்; புதனுல் 23-ம் தேதி வரை பண வரவு, கேளிக்கைகளில் ஈடுபடல், ஆனுல் இறுதி நாட்களின்போது எதிரி களால் அல்லது உடல் நலக் குறை வால் கவலைகளுக்குள்ளாதல்; செவ்வா யினுல் பண வரவும் வெற்றியும்.

## கடகம்

(புனர் பூசம் 4-ம பாதம் முதல் பூசம் ஆயில்யம் முடிய)

ராகுவினுலும் சனியினுலும் பண நஷ்டம்; குருவினுல் கருத்து வேறு பாடுகள் அல்லது மதிப்புக் குறைதல் அல்லது பண நஷ்டம்; சூரியனுல், ராகு, சனி, குரு ஆகியவைகளினுல் ஏற்படும் தீய விளைவுகளை சமாளிக்கும் வகையில் நன்மைகள் நடைபெறல்; சுக்ரனுல் 12-ம் தேதி வரை மன மகிழ்ச்சி, சமய நிகழ்ச்சிகளில் பங் கேற்றல், பண வரவு, புதிய ஆடை ஆபரணங்கள், ஆனுல் இறுதியில் கருத்து வேறுபாடுகள் மற்றும் மதிப் புக் குறைதல்; செவ்வாயினுல் 7-ம் தேதி வரை பணம் நஷ்டம், மதிப்புக் குறைதல், ஆனுல் இறுதியில் அதிக பண வரவு; புதனுல் 7-ம் தேதி வரை ஏமாற்றங்களுக்குள்ளாதல் ஆனுல் இறுதியில் பண வரவு, புதிய நண்பர் கள் மற்றும் மனமகிழ்ச்சி.

## சிம்மம்

(மகம், பூரம், உத்திரம் முதல் பாதம் முடிய)

ராகுவினுலும், சனியினுலும் கவலை கள் அல்லது உற்ருர் உறவினருடன் பிரிவு, அல்லது பிரயாணமும், உடல் நலம கெடலும்: குருவினுல் பிர யாணம்; சூரியனுல் முதல் 15 நாட் களின்போது உடல் நலம் கெடல் அல்லது இடையூறுகள் அல்லது பண நஷ்டம், ஆனுல் இறுதியில் மிகப் பெரிய வெற்றி கிடைக்கப் பெறல்; செவ்வாய் மாதம் முழுவதும் கேடு விளைவிப்பதால் பண நஷ்டம் மற்றும் மதிப்புக் குறைதல்; சுக்ரனுல் 12-ம் தேதி வரை பிரயாணம், உடல் நலம் கெடல், ஆனுல் இறுதியில் வெற்றி அலலது தானிய வகைகள் கிடைக்கப் பெறல், பண வரவு அல்லது மக்கட் பேறு; புதனுல் 7-ம் தேதி வரை பண வரவு, புதிய ஆடை ஆபரணங்கள் அல்லது மக்கட்பேறு, ஆனுல் பிறகு 23-ம் தேதி வரை ஏமாற்றங்கள், பின்னர் பண வரவு, எதிரிகளை வெற்றி கொளல்.

## கன்னி

(உத்திரம 2-ம பாதம் முதல், அஸ் தம், சித்திரை 2-ம் பாதம் முடிய)

ராகுவினுலும், சனியினுலும் கவலை கள்; குருவினுல் பண வரவு மற்றும் தன்னிலை உயர்தல்: செவ்வாயினுல் 7-ம் தேதி வரை மனைவியுடன் கருத்து வேறுபாடு கொளல் அல்லது கண் அல்லது வயிறு சம்பந்தப்பட்ட நோயினுல் அவதிபடல் ஆனுல், இறுதியில் பண நஷ்டம் அல்லது மதிப் புக் குறைதல்; சூரியனுல் முதல் 15 நாட்களின்போது உடல் நலம் கெடல் மனைவிக்கு மன மகிழ்ச்சியின்மை, இறுதி நாட்களின்போது பண நஷ்டம் மற்றும் ஏமாற்றங்கள்; சுக்ரனுல் 12-ம் தேதி வரை பெண்களின் மூலம் கவலை களுக்குள்ளாதல், ஆனுல் இறுதியில் மன மகிழ்ச்சி, புதிய ஆடை ஆபரணங் கள் அல்லது வீடு வாங்குதற்குரிய வாய்ப்பு; புதனுல் 7-ம் தேதி வரை கருத்து வேறுபாடுகள் அல்லது புதிய ஆடை ஆபரணங்கள் அல்லது பண வரவு அல்லது மக்கட்பேறு, ஆனுல் இறுதி நாட்களின்போது ஏமாற்றங் களுக்குள்ளாதல்.

## துலா

(சித்திரை 3-ம்பாதம் முதல், ஸ்வாதி, விசாகம் 3-ம் பாதம் முடிய)

ராகுவினுல் மகிழ்ச்சி; சனியினுல் பணவரவு; குருவினுல் பண நஷ்டம் அல்லது பதவி இழத்தல். சுக்ரனுல் 12-ம் தேதி வரை இகழ்ச்சிக்குள்ளா தல், அல்லது உடல் நலம் கெடல் இறுதி நாட்களின்போது பெண்களால் கவலைகளுக்குள்ளாதல்; சூரியனுல் முதல் 15 நாட்களின் போது பிர யாணம் அல்லது வயிற்று வலியினுல் அவதிப்படல், இறுதி நாட்களின் போது மனைவிக்கு மன மகிழ்ச்சியின் மை அல்லது உடல்நலம் கெடல்: செவ்

வாயினுல் 7-ம் தேதி வரை பண வரவு, வெற்றி, உடல்நலம் மேன்மை. ஆனுல் இறுதியில் மனைவியுடன் கருத்து வேறு பாடு அல்லது கண அல்லது வயிறு சம் பந்தப்பட்ட நோயினுல் அவதிப்படல்: புதனுல் 7-ம தேதி வரை பண வரவு அல்லது தன்னிலை உயர்வு ஆனுல் 23ம் தேதி வரை கருத்து வேறுபாடுகள், அதன் பிறகு மறுபடியும் பணவரவு அல்லது புதிய ஆடை ஆபரணங்கள் அல்லது மக்கட்பேறு.

## விருச்சிகம்

(விசாகம் 4-ம் பாதம் முதல், அனுஷம் கேட்டை முடிய)

ராகுவினுல் கருத்து வேறுபாடுகள்; சனியினுல் பண நஷ்டம் அல்லது மதிப்புக்கெடல்; குருவினுல் பணவரவு வெற்றி அல்லது தானியவகைகள் கிடைக்கப்பெறல் அல்லது மக்கட் பேறு, சுக்ரனுல் 12-ம் தேதி வரை பண வரவு அல்லது மக்கட்பேறு அல்லது விருந்தினர் வருகை மற்றும் பெரியோர்களின் பாராட்டுதல்களுக்குள்ளாதல். இறுதியில் உடல் நலம் கெடல் அல்லது மதிப்புக்கெடல், சூரியனுல் முதல் 15 நாட்களின் போது உடல் நலம் மேன்மை, வெற்றி, ஆனுல் இறுதி நாட்களின் போது பிரயாணம் அல்லது வயிறு சம்பந்தப்பட்ட நோயினுல் அவதிப்படல், செவ்வாயினுல்7-ம் தேதி வரை உடல் நலம் கேடல் அல்லது பிள்ளைகள் அல்லது பெண்களின் காரணமாக கவலைகளுக்குள்ளாதல், அல்லது எதிரிகளின் காரணமாக அஞ்சுதல். ஆனுல் இறுதியில் பண வரவு மற்றும் வெற்றி. புதனுல் 7-ம் தேதி வரை பிள்ளைகள் அல்லது மனைவியுடன் கருத்து வேறுபாடு கொளல் ஆனு பிறகு 23-ம் தேதி வரை பண வரவு அல்லது தன்னிலை உயர்தல், இறுதி நாட்களின் போது வெற்றி அல்லது பணவரவு அல்லது புதிய ஆடை ஆபரணங்கள் அல்லது மக்கட்பேறு.

## தனுசு

(மூலம், பூராடம், உத்திராடம் முதல் பாதம் முடிய)

ராகுவினுல் தீய நடவடிக்கைகளை மேற்கொளல்; சனியினுல் எதிரிகள் அல்லது உடல் நலம் கெடல் அல்லது தீய நடவடிக்கைகளை மேற்கொளல்; குருவினுல் பிரயாணம், உடல் நலம் கெடல்; செவ்வாயினுல் 7-ம் தேதி வரை வயிற்றுக் கோளாறு அல்லது எதிரிகளால் கவலைகளுக்குள்ளாதல், மற்ற நாட்களின் போது பிள்ளைகள் அல்லது பெண்களின் காரணமாக கவலைகள் அல்லது உடல்நலம் கெடல்; சூரியனுல் முதல் 15 நாட்களின்போது எதிரிகளால் அல்லது உடல் நலக்குறைவால் கவலைகளுக்குள்ளாதல், ஆனுல் இறுதி நாட்களின் போது உடல் நலம் மேன்மை மற்றும் எதிரிகளை வெற்றி கொளல்; புதனுல் 7-ம் தேதி வரை குடும்பத்தில் மகிழ்ச்சி, பிறகு 23-ம் தேதி வரை மனைவி அல்லது பிள்ளைகளுடன் கருத்து வேறுபாடு கொளல்; இறுதி நாட்களின் போது வெற்றி; பணவரவு, அல்லது தன்னிலை உயர்தல்; சுக்ரனுல் 12-ம் தேதி வரை புதிய நண்பர்கள், நன் முயற்சிகளில் ஈடுபடல், பிறகு விருந்தினர் வருகை, பண வரவு அல்லது மக்கட்பேறு, பெரியோர்களின் பாராட்டுதல்களுக்குள்ளாதல்.

## மகரம்

(உத்திராடம் 2-ம் பாதம் முதல், திருவோணம், அவிட்டம 2-ம் பாதம் முடிய)

ராகுவினுல் கவலைகள்; சனியினுல் மனைவி அல்லது பிள்ளையுடன் பிரிவு; குருவினுல் பண வரவு, மகிழ்ச்சி: சூரியனுல் உடல்நலம் கெடல் அல்லது எதிரிகளால் கவலைகளுக்குள்ளாதல்; சுக்ரனுல் பண வரவு, மதிப்பு உயர்தல் அல்லது நல்ல நண்பர்கள். செவ்வாயினுல் 7-ம்தேதி வரை தவருன வழியில் அல்லது பிள்ளைகளின் மூலம் பணவரவு ஆனுல் இறுதியில் தீய நண்பர்களினுல் கவலைகளுக்குள்ளாதல் அல்லது வயிறு சம்பந்தப்பட்ட நோயினுல் அவதியுறல் புதனுல் 7ம் தேதிவரைபுதிய நட்புறவுகள் ஆனுல் தவருன செய்கையினுல் அலுவலகக் கவலைகள் ஆனுல் பிறகு 23-ம் தேதி வரை குடும்பத்தில் மகிழ்ச்சி, இறுதி நாட்களின் போது மனைவி அல்லது பிள்ளைகளுடன கருத்து வேறுபாடு கொளல்.

## கும்பம்

(அவிட்டம் 3-ம் பாதம் முதல், சதையம், பூரட்டாதி 3-ம் பாதம் முடிய)

ராகுவினுல் கருத்து வேறுபாடுகள், சனியினுல் பிரயாணம்; குருவினுல் மன அமைதி பரிபோதல்; சூரியனுல் முதல் 15 நாட்களின் போது பதவி கிடைக்கப்பெறல் அல்லது பண வரவு, ஆனுல் இறுதி நாட்களின் போது உடல் நலம் கெடல்; செவ்வாயினுல் அலுவலகக் கவலைகள் அல்லது எதிரிகள் அல்லது உடல் நலம் கெடல் அல்லது வீட்டில் திருடு போதல் ஆகியவற்றின் காரணமாகக் கவலைகளுக்குள்ளாதல், ஆனுல் இறுதி நாட்களின் போது தவருன வழியிலோ அல்லது பிள்ளைகளினுலோ பண வரவு. சுக்ரனுல் பண வரவு. அல்லது தானிய வகைகள் அல்லது பெரியோர்களின் பாராட்டுதல்கள் அல்லது மக்கட்பேறு மற்றும் பண வரவு அல்லது புதிய ஆடை ஆபரணங்கள்; புதனுல் 7-ம் தேதி வரை இகழ்ச்சிக்குள்ளாதல், ஆனுல் பண வரவு, பிறகு 23-ம் தேதி வரை எதிரிகள் ஆனுல் தவருன செய்கையினுல் அச்சம் கொளல். இறுதி நாட்களின் போது குடும்பத்தில் மகிழச்சி.

## மீனம்

(பூரட்டாதி 4-ம் பாதம் முதல், உத்திரட்டாதி, ரேவதி முடிய)

ராகுவினுல் பண வரவு, சனியினுல் வெற்றி மற்றும் உடல் நலம் மேன்மை; குருவினுல் பண வரவு புதிய ஆடை ஆபரணங்கள் அல்லது வாகன வாய்ப்பு அல்லது வீடு வாய்ப்பு அல்லது மக்கட் பேறு; சூரியனுல் முதல் 15 நாட்களின் போது பண நஷ்டம், ஆனுல் இறுதி நாட்களின் போது பண வரவு அல்லது பதவி கிடைப்பெறல், செவ்வாயினுல் கருத்து வேறுபாடுகள் அல்லது அலுவலகக் கவலை, அல்லது திருடு போவதால் பண நஷ்டம், சுக்ரனுல் 12-ம் தேதி வரை மகிழ்ச்சி, பிறகு பண வரவு அலலது தானிய வகைகள் அல்லது பெரியோர்களால் பாராட்டப்படல் அல்லது மக்கட்பேறு; புதனுல் 7-ம் தேதி வரை தவருன ஆலோசனையைக் கேட்டதன் பேரில் பண நஷ்டம், பிறகு 23-ம் தேதி வரை பண வரவு ஆனுல் இகழ்ச்சிக்குள்ளாதல். இறுதி நாட்களின் போது புதிய நண்பர்கள், தீய செய்கையின் காரணமாக அஞ்சுதல்.



EDITED AND PUBLISHED ON BEHALF OF THE T. T. DEVASTHANAMS BY K. SUBBA RAO, M.A. AND PRINTED AT T.T.D. PRESS BY M. VIJAYAKUMAR REDDY, MANAGER, T. T. D. PRESS, TIRUPATI. 517501

நாராயணவனத்திற்கு . . . . . . . வருகை புரியுங்கள் !



# ஸ்ரீ கல்யாண வேங்கடேஸ்வர சுவாமி கோயில் பிரம்மோற்சவம்

உற்சவ விவரங்கள்

| தேதி | கிழமை | பகல் உறசவங்கள் | இரவு உற்சவங்கள் |
|---|---|---|---|
| 5—6—79 | செவ்வாய் | — | சேனபதி உற்சவம், அங்குரார்ப்பணம் |
| 6—6—79 | புதன் | திருச்சி உற்சவம், துவஜாரோஹணம் | பெரிய சேஷ வாஹனம் |
| 7—6—79 | வியாழன் | சிறிய சேஷ வாஹனம் | ஹம்ஸ வாஹனம் |
| 8—6—79 | வெள்ளி | ஸிம்ஹ வாஹனம் | முத்துப்பந்தல் வாஹனம் |
| 9—6—79 | சனி | கல்பவிருக்ஷ வாஹனம் | சர்வபூபால வாஹனம் |
| 10—6—79 | ஞாயிறு | பல்லக்கில் மோகினி அவதாரம் | கருட வாஹனம் |
| 11—6—79 | திங்கள் | ஹனுமந்த வாஹனம் [மாலை-வசந்தோற்சவம்] | கஜ வாஹனம் |
| 12—6—79 | செவ்வாய் | ஸூர்யப்பிரபை வாஹனம் | சந்திரப் பிரபை வாஹனம் |
| 13—6—79 | புதன் | ரதோற்சவம் | குதிரை வாஹனம், கல்யாணுற்சவம் |
| 14—6—79 | வியாழன் | சூர்ணோற்சவம், அவப்பிரதோற்சவம் (தீர்த்தவாரி சக்கர தீர்த்தம்) | துவஜாவரோஹணம், துவாதஸ ஆராதனை, ஏகாந்த உற்சவம். |

திருப்பதிக்கு . . . . . . வருகை புரியுங்கள் !



# ஸ்ரீ கோவிந்தராஜ சுவாமி கோயில், பிரம்மோற்சவம் திருப்பதி

உற்சவ விவரங்கள்

| தேதி | கிழமை | பகல் உற்சவங்கள் | இரவு உற்சவங்கள் |
|---|---|---|---|
| 31-5-79 | வியாழன் | —— | சேனுதிபதி உற்சவம் அங்குரார்ப்பணம் |
| 1-6-79 | வெள்ளி | திருச்சி உற்சவம், துவஜாரோஹணம் | பெரிய சேஷ வாஹனம் |
| 2-6-79 | சனி | சிறிய சேஷ வாஹனம் | ஹம்ஸ வாஹனம் |
| 3-6-79 | ஞாயிறு | ஸிம்ஹ வாஹனம் | முத்துப்பந்தல் வாஹனம் |
| 4-6-79 | திங்கள் | கல்பவிருக்ஷ வாஹனம் | சர்வபூபால வாஹனம் |
| 5-6-79 | செவ்வாய் | பல்லக்கில் மோகினி அவதாரம் | கருட வாஹனம் |
| 6-6-79 | புதன் | ஹனுமந்த வாஹனம் (மாலை-வசந்தோற்சவம்) | கஜ வாஹனம் |
| 7-6-79 | வியாழன் | ஸூர்யப்பிரபை வாஹனம் | சந்திரப்பிரபை வாஹனம் |
| 8-6-79 | வெள்ளி | ரதோற்சவம் | குதிரை வாஹனம் |
| 9-6-79 | சனி | பல்லக்கு உற்சவம், தீர்த்தவாரி அவப்பிரதோற்சவம்சக்ரஸ்நாநம் | திருச்சியில் துவஜாவரோஹணம் |

இவ்விழா நாட்களின்போது மாலை நேரங்களில் ஊஞ்சல் சேவை நடைபெறும்.